## "HELP US HELP THE HELPLESS IN THE WAY TO HELP THEMSELVES."

*Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம் தத்ஸத்.] [God is Love : Knowledge is Power : *Aum*

**"New Series"** ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.** **"Approved"**

புத்தகம். **24.**] நள௵ ஐப்பசி௴, **1916**௵ அக்டோபர்௴ [சஞ்சிகை **7.**

### FREEDOM AND SERVICE OF THE SPIRIT.

FREEDOM AND DISCIPLINE IN EDUCATION.

பாலவித்யாகீதை

அல்லது சிக்ஷா தீக்ஷையின் ஸ்வதந்திரம்.

"THE AIM OF EDUCATION."

"The Aim of Education is primarily spiritual and there are three and only three, primary aims of the spiritual life. These are Goodness, Truth and Beauty."—*Rev. W. Temple, President of the Education Section of the British Association.*

"OUR CARDINAL MISTAKE, AS EDUCATORS."

"I think it has been our cardinal mistake, as educators, to impose on the young during the periods of childhood and adolescence the discipline of compulsion and the discipline of repression (especially the latter) to the exclusion of other formative influences, and then expect them to impose on themselves the discipline of self-control. And, I think, further, that no small part of what is unsatisfactory in our social life, that much of the prevailing disorder and discontent, that many of our acute social maladies, are due to the inability—the sheer inability—of those who have been forcibly disciplined for the first fifteen or twenty years of their existence, to take themselves in hand at a moment's notice, and to control their one anti-social desires and impulses and regulate their own lives."..."Self-discipline—the discipline in freedom—cannot begin at too early an age."—*Mr. Edmond Holmes, late Chief Inspector of Elementary Education in England,* (in the July Nineteenth Century and After).

## "CHARACTER AND ENVIRONMENT."

"CHARACTER IS NINE-TENTHS ENVIRONMENT."—*Sir Henry Jones.*

"Direct compulsion exercised by one person over another, either breeds rebellion or abject servility, according to the nature of the victim. The pressure of environment operates unnoticed and, therefore, with all the more potent effects. *And the only way of creating a good environment for children and the masses is for parents, teachers and leaders* to live upright, ordered and self-controlled lives."

### RELIGIOUS INSTRUCTION IN SCHOOLS.

"I am not interested in the maintenance of religious instruction as something apart from the rest of education as a subject of study like Chemistry or Mathematics......The only religion worth having is one that colours and governs the whole of life and thought."

"All who care for education should watch and help the spirit of 'disinterested desire for knowledge' as that leads to a real emancipation of the soul."

### "THE SALVATION OF THE PEOPLE."

"It must be from the aspiration of the common people that the salvation of the people comes. Nothing that is really good can be imposed upon people by well-wishing superiors. In education, as in everything that concerns the spirit, freedom is the one condition of progress. It is for freedom that we are fighting in the war ; it is for freedom that those who care for education are struggling at home ; for there is nothing that so much hinders the effective freedom of our people as the fact that they are left without facilities for the whole development of their faculties."—*Rev. W. Temple, President, Education Section of the British Association.*

### "REFORM OF RURAL EDUCATION."

"OUR THEISM IS THE PURIFICATION OF THE HUMAN MIND."—*Emerson.*

The memorandum on the "Reform of Rural Education" aims at curing this lopsidedness, so far as rural education is concerned, as the rural population are more in touch with Nature than those bred in the asphyxiating atmosphere of towns and cities.

"The transformation of character which is another name for the evolution of character must begin in the nursery and the school room."

Every reform, for which we are still waiting, and not merely social reform, "is to be achieved, not so much by legislation as by the transformation of character."

### OUR APPEAL TO PARENTS, TEACHERS AND LEADERS.

That is why we request all friends of education and every one interested in the cause of education from the Hon'ble Members of Council down to ordinary parents and teachers to help us and encourage us in this the only method of achieving the much-needed Reform of Rural Education in this country.

### HELP TO "OUR ELEMENTARY TEACHERS."

We know, as an English friend, a member of the Indian Educational Service, who is an authority in educational matters urges it on us,—we "know, our elementary teachers; a few are idealists but the vast majority have no more idea of education than they have of aviation " But we also know that *it is not their fault*, and we believe, if they are given opportunities of helping themselves, an appreciably large number of them are not incapable of availing themselves of such opportunities to rise above their own ignorant selves. We find an Indian Member of Council saddling them (rightly or wrongly, it is not for us to enquire) with the responsibility which "even the most educated of our countrymen" have "miserably failed" to realise—*viz*., the serious responsibility of developing "the undeveloped faculty of observation" and that to the extent of using it "to develop the power of observation of their students, to teach them to use their eyes and their hands to study Nature and take a real pleasure in Nature-study." We ask in all seriousness "Are they to be mere blind leaders of the blind ?" Having exacted a pledge from us to serve the children, their teachers and parents to the exclusion of the general public, we think we have a right to ask them "to stoop down" to the level of children, their teachers and parents, and "help us help the helpless in the way to help themselves."

And REMEMBER, PLEASE, "the only way of creating a good environment for children and the masses is for parents, teachers and leaders to live upright, ordered, self-controlled lives."

"No good work is ever lost." "My best wishes for the success of your publication"—*Sir Harold Stuart, K. C. V. O.*
புஸ்தகம்-24.] [சஞ்சிகை-7.
"The Children's Favourite, the Teachers' Help, and the Parents' Guide."

நள ஐப்பசி } விவேக  சிந்தாமணி { Oct.-Nov. 1916.

ESTABLISHED 1892

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றே மெனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னேஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

## "HELP US HELP THE HELPLESS IN THE WAY TO HELP THEMSELVES."

### IN PRAISE OF CHILD EDUCATION.
### பாலவித்யா கீதை.

"The transformation of charactor which is another name for evolution of charactor must begin at the nursery and the school-room."

"துர்க்காலக்ஷ்மி ஸரஸ்வதீதேவி
மஹிஷாஸுர மர்த்தநிஜய
வித்யாலக்ஷ்மி ப்ரஹஸ்பதீம் வந்தே
அத்யாத்மிக சாந்த நீதுபவ!
வித்யாரம்பதினே விஜயதசமியாம்
ஹே அமிர்ததே துவாம்வந்தேது ஸர்வதா."

"ஏகைவசக்தி பரமேச்வரஸ்ய ப்ரயோஜனார்த்தாய சதுர்விதாபூத், போகேபவானி, புருஷேஷு—விஷ்ணு, குரோதேசகாளி, சமரேசதுர்க்கா."

வித்தையென்பது வித் என்னும் தாது வடியாகப் பிறந்தது. அறிவுக்கு ஆதாரமாயிருப்ப தொன்றெதுவோ அது வித்தையென்னப்படும். அந்த வித்தையை சிக்ஷைதீக்ஷா சேவைகளால் அடுத்து வழிபடுதல்தானே வித்யாரம்பம். ஹிந்துக்கள் எல்லாருக்கும் வித்யாரம்பதினம் விஜயதசமி யன்றைக்காமென்பது உலகப் பிரசித்தம். அந்த வித்யாரம்பதினத்திலே (அதாவது விஜயதசமியிலே) சிறு குழந்தைகளுக்கு வித்யாரம்பம் செய்வது ஹிந்துக்களுக்கு வழக்கம். இன்றைக்கு 12-வருஷங்களுக்கு முன் இவ்விவேகசிந்தாமணியின் ஆசிரியர் அவருடைய குழந்தைக்கு வித்யாரம்பம் செய்து வைத்தனர். அப்பொழுது பாவனுவிசேஷத்தால் தாமும் குழந்தையேயாகி வித்யாதேவியைத்தொழுத சுலோகத்தை இதன் முதலில் வரைந்திருக்கிறோம். 12-வருஷமாகிய ஒரு "மாமாங்கம்" கழித்து நாட்டிலுள்ள குழந்தைகளுக்கெல்லாம் வித்பாப்யாசம் செய்துவைப்பதி லுழைப்பதாகச் சத்தியம்செய்து வாங்கிய வித்யா அதிகாரிக்குக் கொடுத்தவாக்குத் தவருது நாட்டுப்படிப்பைச் சீர்திருத்துவதற்கான முறையை நாம் 30-வருஷகாலமாக அறிவைப் பரவச்செய்யுந் துறையில் இறங்கியுழைத்த உழைப்பின் அனுபவங்கொண்டு ஒருவாறு குறிப்புரையாகச் சொல்லவேண்டியதைச் சொல்லி அச்சிட்டு கவர்னர்முதல் வித்யாதிகாரிகள், வித்யாபிமானிகள், பெற்றோர்கள், புண்யவதிகளான தாய்மார்களையுங்கூட நேரிலோ, கடித மூலமாகவோ கண்டு கலந்துயோசித்து அவர்கள் கருத்தையும் உள்வாங்கிக்கொண்டு சாராம்ஸத்தைவிடாது கிரகித்து வெளியிட்டோம்.

இனி அவ்வேலையைத் தொட்டுத் தொடர்ந்து மேலுழைக்கவேண்டும். இது எல்லாரும் சேர்ந்து ஒத்துழைக்கவேண்டிய காரியமாயிருக்கிறது. லோகல்போர்டு அதிகாரிகள் ஸ்கூல்மானேஜர்கள் வித்யா இலாகா அதிகாரிகள், பெற்றோர்கள், பிள்ளைகள், உபாத்தியாயர்கள் எல்லோரும்சேர்ந்து ஒத்துழைக்கவேண்டும். அதாவது ஒருமனப்பட்டு உழைக்க வேண்டும். திருச்சினாப்பள்ளியில் லாலுகுடி

வித்யாபொருட்காட்சி சாலையைத் திறந்த பொழுது கனம்பொருந்திய கௌன்ஸில் மெம்பர் ஸர். பழமானேரி சுந்தரப்பய்யர் சிவஸ்வாமி அய்யர் அவர்கள் பிரதமபாடசாலை உபாத்தியாயர்கள் செய்கடன்களில் முக்கியமான தொன்றையெடுத்து வற்புறுத்திக்கூறினார். அது என்னவென்றால், நம்மில் பெருமிதமாகக் கற்றோர்களும் வாய்ச்சாலமாகப் பேசியும் படித்தும் வாதித்தும் வியாஸங்கள் எழுதியும் விசேஷமான வித்யாசாமர்த்தியம் பொருந்தியவர்களாகக் காட்டக்கூடுமானாலும், ஒரு காட்சியைக் கண்ணால்கண்டு காதால்கேட்டு அல்லது ஸ்பரிசத்தாலுணர்ந்து உள்ளதையுள்ளபடிகண்டு, கண்டதைக் கண்டபடியுரைக்கச்சொன்னால் மிகத் தடுமாறிப் போவார்களென்பது பிரத்தியக்ஷமாய் எல்லாருக்கும் தெரிந்திருக்கிறது என்றும், இதனால் நமக்குள் தரிசனசக்தி பயிர்ச்சியின்றிக் குன்றிக் கிடக்கிறதென்றும், பிரதமபாடசாலை உபாத்தியாயர்கள் அவர்களிடம் ஒப்புவிக்கப்பட்ட குழந்தைகளின் தரிசன சக்தியை வளர்த்து விகசிதமாகப் பிரகாசிக்கச் செய்ய வேண்டியது அவர்கள் செய்கடன்களில் ஒன்றாக இருக்கிறதென்றும் சொன்னார். இதைத்தான் நம்மில் குழந்தையின் பெற்றோர்கள் வித்யாப்பியாச காலத்தில் குழந்தையை வித்யா குருவிடம் ஒப்புவித்து "குழந்தையைக் கண் திறந்துவிட்டு ஆளாக்கவேண்டும்" என்று கேட்டுக்கொள்ளுகிறார்கள். இது புராதனமாய் உள்ள வழக்கங்களில் ஒன்று.

இப்படிப்பட்ட பிரதமபாடசாலை உபாத்தியாயர்களில் சிறுபான்மையர் இலக்ஷிய இலக்ஷண உணர்ச்சியுள்ளவர்களாயிருப்பதுண்மையாயினும் பெரும்பான்மையாக எல்லாருக்கும் வித்யாப்பியாசம் என்பதைப்பற்றியே ஒன்றும் தெரியாதென்றும், ஆகாய ரதமேறிப்பறக்க எவ்வளவு அருகர்களோ அவ்வளவு அருகர்களாயிருக்கிறார்கள் உள்ளபடி வித்யா போதனை செய்யும் கடனைச் செலுத்துவதிலும் என்றும் ஸ்கூல் இன்ஸ்பெக்டர் ஸ்தானத்திலிருந்து அனுபவம் பெற்ற மேதாவியான ஆங்கிலேயர் ஒருவர் நமக்கு எழுதியிருக்கிறார். இது நமக்கும் தெரிந்ததேதான். ஆனால் இவர்களெல்லாருமே உருப்படாதவர்களென்று நாம் நினைக்கவில்லை. வித்யாபோதன முறையைக் கற்றுக்கொள்வதிலும், தாங்களே வித்யாப்பியாசம்செய்து மனதைப் பழக்கிக்கொண்டு தேர்ச்சி பெறுவதிலும் வேண்டிய சாதகசாதனங்களின் உதவி கிடைக்குமாயின், இவர்கள் பெருமுயற்சிசெய்துழைத்து முன்னுக்குவரப் பார்ப்பார்களென்றே நம்புகிறோம். அந்த நம்பிக்கைவிசேஷத்தினாலேயே கைப்பொருள் நஷ்டத்தையும் தேஹமனோசிரமத்தையும் பெரிதாகக் கருதாமல், இதையோர் உத்தமமான தெய்வ கைங்கரியமாகக்கொண்டு ஈசனருளை முன்னிட்டு, ஜனசமூகத்திலுள்ள சிரேஷ்டர், சிரோமணிகள், சாமான்யர்கள் எல்லாருடைய உதவியையும் கோறி அவர்கள் ஒத்துழைப்பார்களென்று நம்பி இதில் அதிக ஊக்கத்துடன் உழைத்து வருகிறோம். நாம் முக்கியமானதென்று காட்டிய சீர்திருத்தங்களெல்லாம் மேற்றிசையிலும் பிரதமஸ்தர்களாயிருக்கிறவர்களால் வித்யாக்ஷேமத்துக்கு அவசியமானவையும் இன்றியமையாதனவுமாயிருக்கிறதென்று ஒப்புக்கொண்டு அவர்கள் அபிப்பிராயம் பலிக்கப் பிரயத்தனம்செய்து வருகிறார்கள். அவர்களுடைய முக்கிய கருத்தை முதலேட்டிலும் இரண்டாமேட்டிலும் இங்கிலீஷில் சுருக்கமாய் எடுத்துக் கூறியிருக்கிறோம். இது இங்கிலீஷ்தெரிந்த பெற்றோர்கள் பிரதமபாடசாலை உபாத்தியாயர்கள் மேல்வகுப்பில் வாசிக்கும் மாணவர்கள், இவர்களுக்கு உதவியாக விருப்பதன்றி தமிழ் தெரியாதவர்களாய் இருந்தும் பிரதமவித்யாபிவிர்த்தியில் அதிகசிரத்தையுடையவர்களாயுள்ள ஆங்கில, இந்திய நண்பர்கள், அதிகாரிகள், மற்றவர்களுக்கும் நமது முயற்சியின் போக்கு இன்னபடியிருக்கிறதென்று தெரிந்துகொள்ளச் . சாதகமாயிருக்குமென்று அவ்விரண்டு பக்கங்களையும் இங்கிலீஷில்தானே வழக்கமாய் அச்சிட்டு வருகிறோம். அங்கே

சொல்லியுள்ள கருத்துகள், எண்ணங்கள், இலக்ஷியங்கள் எல்லாம் அப்போதைக்கப் போது விவேகசிந்தாமணியில் எடுத்துக் கையாளப்பட்டவையாகவே யிருத்தலால், இங்கிலீஷ் தெரியாதவர்களுக்கு அதைப்படிக்க முடியாததால்வரும் நஷ்டம் ஒன்றுமில்லையென்று நம்புகிறோம். ஆனால் அவர்கள் விவேகசிந்தாமணியை சிரத்தையோடும் பக்தியோடும் விடாது படித்துவருகிறவர்களாயும், அப்படியேபடித்து வந்தவர்களாயு மிருக்கவேண்டும். இவ்வளவு முகவுரையோடு தாய்மார்கள் பிள்ளைகளுக்குப் புகட்டவேண்டியது எவ்வளவிருக்கிறதென்று காட்ட 22-வது வால்யம் முதல் நம்பரில் வித்யா அதிகாரியின் நேர் சம்மதியின்பேரில் அவர் பார்வையிட்டு அங்கீகரித்த விஷயமொன்றிலிருந்து பிள்ளைகளுக்கும் பெற்றுவளர்க்கும் பாக்கியம்பெற்ற தாய்மார்களுக்கும் அவர்கள்போற்றும் குழந்தைகளுக்கும் உபயோகமான பாலவித்யாகீதையாக விளங்கும்படி வித்யாதத்துவங்களாக மேற்றிசை யாராலும் எல்லாராலும் கொண்டாடப்படும் சில உத்தமக் கொள்கைகளடங்கிய உண்மையை தாலாட்டு ரூபமாக விவேகசிந்தாமணியில் வெளியிட்டிருப்பதி லிருந்தெடுத்துக் கீழே பிரசுரிக்கிறோம்.

"தொட்டிற்பழக்கம் சுடுகாடுமட்டும்" என்பது பழமொழி யாதலாலும், "அறையிலே யாடினதே அம்பலத்திலு மாடவரும்" என்பது வாசனை விசேஷத்தின் மஹிமையாக விருப்பதாலும், இன்றைக்கு கத்தரிக்காய் திருடின குழந்தையின் கையே நாளைக்குக் கன்னக்களவு செய்யத்துணியுமாதலால், களவுங்கபடுகளைப் பெற்றதாய் தன குழந்தை மடியிற பாலனையிருக்கையிலேயே தன தாயின்பால் ஆராய்ந்தறிந்து களைந்துவிடல்வேண்டும். அதற்குச் சாதனானுகூலமாக விவேகத்தாய் தன கண்மணிக்குச்சொல்லும் புத்திமதிகளை விவேகரஸம்பொழியும் இத்தாலாட்டு மொழிகளில் காணலாம்:—

1. "ஆதலாற் கண்மணியே
அழகுமிகும் விண்மணியே
காதலித்த கற்பகமே
கள்ளமெதுஞ் செய்யாதே.

2. "கள்ளமெதுஞ் செய்யாதே
கபடேதுஞ் செய்யாதே
எள்ளளவும் வஞ்சகத்தை
இச்சைவைத்துச் செல்லாதே.

3. களவுசெய்த கைகளுக்குக்
கனவிலங்கு பூட்டிடுவார்,
அளவிலாத் தனபமுண்டாம்
ஆற்றுதற்கு மாளாது.

4. பொய்சொன்ன வாயிற்
புழுப்புழுக்கு மென்னரசே
மெய்சொன்ன வாயில்
விளம்புவதுஞ் சீனியம்மா.

5. மதிகேடு செய்தாலும்
மார்க்கமுண்டு தப்பியிட
சதிகேடு செய்யாதே
தங்கள்கண்ணி தங்களுக்கே.

6. வஞ்சித்தார் வாழார்
வழிப்பறித்தார் பாழாவார்
பஞ்சான தேகமிது
பகவா னொருவனுண்டு.

7. கச்சைகட்டிக் கூத்தாடிக்
கடைத்தெருவி லோடேங்கி
பிச்சையெடுத் துண்டாலும்
பிறர்துயரம் செய்யாதே.

8. தணியாத கோபமுள்ளார்
தயக்கம்வந்து தாழ்வார்கள்
பணிவாய் நடப்பவர்க்கோ
பாரெல்லாங் கையாட்சி.

9. மூலந் தனத்தினுக்கு
முயற்சியென்பா சிற்சிலபேர்
காலக திரவியமாம்
கருததுடையார் காட்சியிலே.

10. உடலம பிணிநீங்கி
உள்ளமதும நற்றெளிவாய்
திடம்பெற் றிருப்பதுவே
சேரறிய பாக்கியமாம்.

11. அகலாது வாசனைதான்
அகிலமிதி லெல்லோர்க்கும்
சகவாசம் போல்நடக்கை
சத்தியந்தான் சத்தியந்தான்.

12. மாறுக்க லகமதை
மாற்றுவது நன்மௌனம்
ஆருத் துயரமெல்லாம்
ஆற்றுவதோ வீசனருள்.

13. சத்தியமே நன்மார்க்கம்
தவறுவரு மற்றெதிலும்
வித்தையிதில் லாபமெத்த
விசுவாசம் மெத்தமெத்த.

14. பூட்டியிட்ட தேகமிது
போயழிபு மெந்நாளும்
காட்டிஉள்ள வாழ்வினுக்கு
நற்பெயரே கண்டபலன்.

15. வாலிபந்தா னுனாலும்
மாசிமறு சம்மதியேன்
பாலியந்தா னுனாலும்
பழிபழுது சம்மதியேன்.

16. சித்தம்மொழி தான்திருந்தி
செயல்திருந்தி நீ நடப்பாய்
உத்தமியான் பெற்றெடுத்தேன்
ஒருகுறையுஞ் செய்யாதே.*

17. உள்ளபல பூமியெல்லாம்
ஓர்குடைக்கீ ழாண்டாலும்
பிள்ளைகளை வளர்க்கும் வித்தை
பிரயாசமானவித்தை.

18. ஆராய்ந் துலகனைத்தும்
ஆண்டாலும் பிள்ளையொன்றை
நோக்க மாளாது
நிச்சயந்தா னிச்சயந்தான்.

19. கண்ணே யுறங்குறங்கு
கற்பகமே நித்திரைபோ
மண்ணிலுள்ள யாபேரும்
வாழியென்று நித்திரைபோ.

20. பிள்ளையை வளர்ப்பதிலே
பேரறிவு பெற்றுநின்ற
தள்ளையெல்லாம் வாழியென்று
தண்ணமுதே நித்திரைபோ.

* The following assurance of the Child grown up under such tender care and influence of the Mother will be instructive and interesting to all who believe in the Impressionable nature of the Child-mind. "*You may assure Mother that I will never do anything which she may disapprove of, or may cause her pain.*" Thus is the abiding influence of the intelligent and discriminate Mother in the Nursery potent for good in the critical period of youth and adolescence.

[Ed. "V. C."]

## THE PRINCIPLE OF CO-OPERATION.

எத்தால் வாழலாம்?
ஒத்தால் வாழலாம்!

Co-operation supplements political economy by organishing the distribution of wealth. It touches no man's fortune, it seeks no plunder, it causes no disturbance in society, it gives no trouble to statesmen, it enters into no secret associations; it contemplates no violence, it subverts no order; it envies no dignity, it asks no favour, it keeps no terms with the idle, and it will break no faith with the industrious; it means self-help, self-dependence, and such share of the common competence as labour shall earn or thought can win, and this it intends to have."—*G. J. HOLYOAKE.*

"My brave boys,—Nothing else necessary but these—*Love, Sincerity*, and *Patience*. What is life buf growth, i, e., *Love*. Therefore all love is life, it is the only law of life; all selfishness is death; and this is true here or hereafter. It is life to do good, it is death not to do good to others."—Epistle of *Swami Vivekananda*.

"He doeth much that doe th a thing. He doeth more that serveth others in the doing. He doeth most that loveth most 'the God that made and loveth all'."

"We have got each to be a real Christ or the world will never be saved. Only Christs can save the world. And what was the Christ? Absolute unity with God, real unity with man. Are we united with man? A whole gulf cuts us off from all but a few of our fellow creatures. Yet we are one with them......that is, we ought to be. And until we are, we are not a Christ."—*From W. T. Stead's Annual "Here am I: Send me."*

"எத்தால் வாழலாம்? ஒத்தால் வாழலாம்!" என்பது நமக்குள் வெகு காலமாக வழங்கி வரும் ஒரு பழமொழி. இது இகபரமிரண்டிற்கும் சரி. 'ஒத்துமை' என்றால் என்ன? மனது ஒன்றுபடுந்தன்மை. இதற்கு மாறாயிருப்பது என்ன? அஹம்பாவம். "அஹமழிந்தால் பரமாகும்" என்பது உண்மையானாலும்,

"அஹம்விருத்தியினால்" மனோவிருத்தியும், மனோவிருத்தியினால் புத்திகூர்மையும், புத்தி கூர்மையினால், வஸ்து விவேகமும், வஸ்து விவேகத்தால் அஹத்தை (நான், எனது, என்று அகங்கரிப்பதை) விட்டுப்பரத்தை ('எல்லாம் நான்' என்னும் மேலான பாவத்தை) ப்பற்றினால் அப்பொழுது 'எல்லாம் நீ' 'உன்னுடைமை' 'உன்னடிமை' யென்கிற பாவம் தானாகத் தோன்றும். 'எல்லாம் நான்' என்கிற பாவமும் அழிந்து 'எல்லாம் நீ' யென்கிற பாவமுதித்தால் அப்பொழுது 'நான் நீ' என்கிற வேற்றுமை யொழிந்துபோம். இப்படி யொழிந்துபோகுங்கால் 'தன்னைக்கொடுப்பதே' கலைமையான ஆனந்தமாகவிருக்கும். இப்படி அஹம் முதிர்ந்துதிர்ந்து தன்னைக்கொடுக்கும் திறமைவாய்ந்த பரமோத்தமனுக்குக் கடவுள் தன்னையே கொடுக்கிறார். இந்த அநுபவத்தை எம்பெருமான் ஸ்ரீ மாணிக்கவாசகர் பின்வரும் பாட்டில் நன்றாகச் சொல்லியிருக்கிறார்:—

"தந்த துன்தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா ஆர்கொலோசதுரர்
அந்த மொன்றில்லா ஆனந்தம்பெற்றேன்
யா்து நீ பெற்றதொன்றென்பால்
சிந்தையேகோ யில்கொண்ட எம்பெருமான்
திருப் பெருந்துறைபுறைசிவனே
எந்தையே! ஈசா! உடலிடங்கொண்டாய்!
யானிதற்கிலனொர்கைம்மாறே!"

இந்தப் பரமானந்த சுகத்தைப் பெற்று ஜன்ம சாபல்யமடையும் பொருட்டுத் திருவாதவூரர் துறவுபூண்டு நிறைவெய்தியர். நம்மால் துறவுபூணல் சாத்தியமா? என்றுகேட்கலாம்! இல்லை! அவர் பாண்டியனுக்கு அமைச்சராகவிருக்கையில் அருள்பெற்று அனுபவம் முதிர்ந்த பின்னே, அவருக்குக் கிடைத்த பூரணானந்தத்தை யநுபவிக்கும்பொருட்டு ஏற்கனவே கைத்துப் புளித்துப்போன சிற்றின்ப சுகங்களை விட்டொழித்தார். அதுவு மீசனருளிருந்தவாறென்றுணரத்தக்கது.

இப்பொழுது இவருடைய உதாரணத்தைச் சொன்னது என்னத்திற்காக வென்றால், "அஹம்விருத்தி-பரசேவை" என்னும் முக்கிய சாதனங்களைக்கொண்டு எல்லாரும் (பரம ஏழைகளும்) கிரமேண ஹிருதயசுத்தியுண்டாக வுழைத்து, இகசுகானுபவங்களைக் கொண்டே பரசுகத்தையும் தேடிக்கொள்வது வழியறிந்து பிழைப்பவர்களுக்கு மிகவும் எளிதாம் என்பதை வற்புறுத்துமாறேயன்றி வேறல்ல.

அஹம் விருத்தியின்றி—நான் என்கிற பாவம் முதிர்ந்து பழுத்தாலன்றி—அஹங்காரம் அழியாது. அஹங்காரத்தை முளையிலே யடக்கினால் தாமஸாந்தகாரமாகிய மூடத்தன்மை வந்து மூடிக்கொண்டு—அஹலிகையைப்போல் கல்லாகப் போகவேண்டும். இப்படி மூடமும் சோம்பலும் வந்து மூடிக்கொள்ளாதபடி நாம் "அஹம்விருத்தி" செய்யவேண்டும். "அஹம்விருத்தி" என்றால் இந்த ஜகமெல்லாம் எண்சாணுடல்பெற்ற எனது போக போக்கியத்துக்குத் தான் சிருஷ்டிக்கப்பட்டதென்று மமதைகொண்டு துரியோதனனைப் போல், அகங்காரத்தால் அழிந்துபோவதல்ல; பின்னென்னவென்றால், — தனுகரண புவன போக்கியங்களெல்லாம் நாம் ஆத்மலாபத்தை யடையும்பொருட்டு நமக்கு ஈசுவரன் அளித்ததாகவெண்ணி, ஒவ்வொரு அனுபவத்திலும் உள்ள உண்மையை உள்ளபடியுணர்ந்துய்வதே 'அஹம் விருத்தியாம்.' இந்த "அஹம் விருத்தி" "பரசேவை" யின்றி சாதிக்கத்தக்கதல்ல வாதலால், "அஹம்விருத்தி-பரசேவை" இரண்டையும் ஆத்மானந்தம் பெறுவதற்கு ஹேதுவான வழிநடப்பதற்குற்ற இரண்டு கால்களுக்குச் சமானமாக ஒப்பிட்டுக் கூறுவதுண்டு.—"அஹம்விருத்தி-பரசேவை" யென்று சொன்னால் கேட்க இன்பமாகத் தானிருக்கிறது! முடிவில் கிடைக்கும் ஆத்மலாபம் அழிவற்ற இன்பத்தைக் கொடுப்பதால் எல்லாரும் விரும்பத்தக்கதாயும், உண்மையாகவே யெல்லாரும் விரும்புவதாகவு மிருக்கிறதுண்மைதான்! ஆனால் அவனவன் வயிறு வளர்ப்பதே கஷ்டமாயிருக்கிற இந்தக் காலத்தில், பரசேவை செய்யக் காலமேது? பரசேவையினால் பசித்த வயிற்றுக்

குச் சோறு கிடைக்குமா?—என்று இதை வாசிக்கும் உலக ஞானிகள் நம்மை உசாவலாம். அவர்களுக்குச் சரியான பதில் சொல்லத் தயாராயிருக்கிறோம். ஆனால் மனதைக் குதர்க்கம் செய்வதில் செல்லவிடாமல், உண்மையை உள்ளபடி யுணரவேண்டுமென்கிற உத்தம சித்தங்கொண்டு, அந்த சிந்தனையில் மனதை நிறுத்தி கிராகியசக்தியோடிருந்து கேட்கவேண்டும்.

"ஐயா! உலகஞானியே! நீர் சொல்லுகிற ஆக்ஷேபனையை நான் ஒப்புக்கொள்கிறேன். வயிற்றுப்பாடு பெரும்பாடு என்பதை ஒப்புக்கொண்டே பேசுகிறேன். ஐயா வயிற்றுப் பாட்டைப் பார்க்கையிலே மனதும் சுத்தப்பட வழி யேற்பட்டால் அது நல்லதுதானே! அதையும் சீர்தாது கேவலம் மிருகஜன்மமாகத் தான் காலங்கழிப்பேன் என்பாருக்கு நான் ஒன்றும் சொல்ல வரவில்லை. மிருகஜன்மத்தைப் பழக்கவாசனையால் வெகுதூரம் நல்வழிக்குக் கொண்டுவரலாம். ஆனால் அது பழக்கவாசனையாகமட்டு மிருக்குமே யன்றி அதன் உட்கருத்தை யுணர்ந்துகொள்ள அதற்கு சக்தியில்லை. ஸ்வாமி அந்த ஜன்மத்துக்கு அவ்வளவுதான் உண்டென்று படியளந்திருக்கிறார். அதைமீறி நடக்க யாராலுமில்லை. ஜன்மம் ரூபத்தைமட்டும் பொறுத்ததல்ல. முக்கியமாய் மனோ நிலையைப் பொறுத்ததாம். ஜடபர தரும்மாளுகப் பிறந்தார். பிறந்தும் அவர் ஜீவன்முக்திநிலை குலையவில்லை. துச்சாதனன் மனிதவுருவெடுத்தும் அவன் மிருகத் தன்மை அவனை விடவில்லை. ஆகையால் மானிட ரூபத்திலும் எத்தனையோ ஜன்மமுண்டு. "காண்டாமிருக முதலாகக் காக்கை கழுவீறாக வெத்தனையோ ஜன்மம்மா!" என்பது உண்மை, உண்மை! ஆகையால் அவர்களை விட்டு சன்மார்க்க விருத்தியையும் சத்குண சம்பத்தையும் நாடி யுள்ளவர்களில் ஏழை எளியவர்களாயிருப்பவர்களை யெடுத்துக்கொண்டு பேசுவோம்.

"ஒருவன் ஏழையாயிருந்தால் வயிற்றுக்குச் சாப்பிடாமல் இருக்கிறானா! எப்படியோ பாடுபட்டுழைத்துப் பணத்தைத் தேடி உப்புப்புளி மிளகாயாவது வாங்கி ஜீவனம் செய்கிறான்! இப்பொழுது இந்த ஏழை தன்னந்தனியாயிருந்தால், அதோ அந்த முடுக்கில் பலசரக்குக் கடைவைத்திருக்கும் பாப்பைய செட்டி மொத்தமாகப் பண்டங்களை வாங்கி சில்லரை வியாபாரந்தானேயென்று தம்படிக்கு தம்படி லாபம்வைத்து ஒன்றுக்குப் பாதியாக விற்று இந்த ஏழையின் காசைப் பறித்துக்கொள்வது மன்றி, சரக்குகளைக் கண்டபடியெல்லாம் கொட்டிக் கலந்து, மண்ணும் மணலும் சேர்த்தும் இன்னும் சொல்லத்தகாத எத்தனையோ அக்கிரமங்கள் செய்தும், இவன் தேக சௌக்கியத்தையும் கெடுத்து நாளைக்கு உழைத்து ஒருபணம் சம்பாதிப்பதற்கும் சக்தியில்லாமல் செய்துவிடுகிறான். இந்தக் கொடுமைக்கு விமோசனமென்னவென்று பார்த்தால் ஏழை மனிதனுக்கு ஒன்றும் தோன்றவில்லை! கடவுளை நொந்துகொண்டு தன் தலைவிதியென்று வந்ததை யனுபவிக்கிறான்! ஐயா! கர்மம் என்பதும் விதியென்பதும் இதற்குத்தானா சொன்னது. கர்மம் என்பது இன்னவென்றும் விதியென்பது இன்னவென்றும் கண்டு தேறிய நமது ரிஷிகள் இப்படி ஏழைகள் தியங்கி மயங்கிக் கெட்டுப் போகாமலிருக்கும் பொருட்டு, ஜாதி யேற்பாடுசெய்து வர்ணாச்ரம தர்மங்களை விதித்தார்கள். அந்த வர்ணாசிரம தர்மங்கள் எந்த ஸநாதந தர்மத்தை யனுசரித்து ஏற்படுத்தப்பட்டதோ, அந்த ஸநாதந தர்மம் இன்றைக்கும் என்றைக்கும் உண்மையேயாயினும், அதை யொட்டி அந்தந்தக் காலதேசவர்த்தமான பேதங்களுக்கிசைய நமது இருஷிகள் ஏற்படுத்திய வருணாசிரம தர்மங்களின் உள்மர்மத்தையுள்ளபடி யுணர்ந்துய்வாரின்றி இப்பொழுது அந்த தர்மங்கள் காலத்திற்கேற்ற மாறுபாடுகள் செய்வாரின்றி தலைதடுமாறிக் கிடக்கின்றன. பிரம்மவித்தையை யுபாசித்து அனுஷ்டிக்கிறவனுக்கு பிராம்மண தர்மம்.

ராஜ்ய தர்மவித்தையை யனுஷ்டிப்பவர்க்கு க்ஷத்திரிய தர்மம். பொருள் சேகரித்தலாம் அர்த்த வித்தையை யனுஷ்டிப்பவர்களுக்கு வைசிய தர்மம். இம்மூன்றுக்கும் யோக்கியதையின்றி கேவலம் அடிமைத் தொழில்மட்டும் செய்யத்தக்கவர்களை சூத்ர வர்ணத்தில் சேர்ந்தவராக்கியுள்ளார்."

இப்போ "ஜன்மம்" என்பதற்குள்ள தத்துவார்த்தத்தை யுணராமல் நம்மவர்கள் மதிமயங்கித் தவிக்கிறார்கள். ஆகையால் அம்மயக்கொழிய, இக்காலத்துக்குத் தக்கபடி ஸநாதநதர்மத்தையொட்டி யேற்பட்டுள்ள உண்மையான தர்மஸ்தாபநங்களை நாம் ஆச்ரயித்துக் கடைத்தேறவேண்டும். இப்படி யேற்பட்ட நவீன நாமதேயமட்டுமுள்ள பூர்வாச்ரம தர்மஸ்தாபனங்களில் ஒன்று: "கோ-ஆபரேடிவ் ஸொஸைடி" என்று இங்கிலீஷ் நாமம் பூண்ட "ஒத்துவாழும் தர்மத்தை உட்புகட்டும் கருத்துக்கொண்ட ஜனக்கூட்டங்களாம்" இந்த ஜனசங்கங்கள் அங்கங்கே யேற்பட்டுழைத்துவரவேண்டுமென்றும், இதில் பழகி "எத்தால் வாழலாம் ஒத்தால் வாழலாம்" என்னும் மூதுரையின் உள்மர்மத்தை ஜனங்கள் உணர்ந்துய்ய வேண்டுமென்றும் கருதி துரைத்தனத்தார் ஒரு சட்டம் செய்திருப்பதுமன்றி இதற்காக கலெக்டர் அந்தஸ்துள்ள ஒரு உத்தியோகஸ்தரை ரிஜிஸ்திராராகவும் நியமித்திருக்கிறார்கள். இப்படி இராஜதானிதோறும் நியமிக்கப்பட்டிருக்கிற உத்தியோகஸ்தர்களில், இவ்விராஜதானி முழுமைக்கும் இது விஷயமாக முதல் முதல் வேற்படுத்தப்பட்டவர் தென்கன்னடம் ஜில்லா கலெக்டர் ஸ்தானத்துக்குரியவராய் இப்பொழுது உள்நாட்டு செக்ரிடெரியாக விருக்கும் கனம்பொருந்திய ம-া-ா-ஸ்ரீ திவான் பஹதூர் இராஜகோபாலாசாரியார் அவர்கள். இவர் நியமனம் பெற்றபின் இரண்டு வருஷங்களாக இவ்விராஜதானியெல்லாம்சுற்றி அங்கங்கே ஜனங்கள் அவரவர்களுடைய தொழில் வியாபாரம் விருத்தி யவைகளுக்கேற்ப ஒத்துவாழ ஆஸ்பதமான ஒத்துழைக்கும் சங்கங்கள் ஏற்படுத்தியிருக்கிறார். ஒத்துவாழும் தன்மை குணத்தைப் பொறுத்ததால், அவரவர்கள் ஹிருதயபூர்வமாகவுண்டாகும் சிந்தை காரணமாக இந்தசத்குணம் பிறந்து விருத்தியாகவேண்டுமேயன்றி சர்க்கார் நிர்ப்பந்தத்தாலாவது வேறு எந்தநிர்ப்பந்தத்தாலாவது இது விருத்திசெய்யத்தக்கதல்ல! ஆனால் சர்க்கார் உத்தியோகஸ்தர் ஒருவர் ஏன்? என்று கேட்டால், பல ஜனங்கள் எளியவர் ஏழைகளாயிருப்பவர்கள் சேர்ந்து ஏழைகளுக்கனுகூலமாகச் செய்துகொள்ளும் முயற்சியாதலால், யாராவது வல்லாளகண்டர் புகுந்து ஏழை ஜனங்களை ஏமாற்றிவிட்டுப் போகாதபடி ஒருவாறு சட்டதிட்டங்கள் செய்து அவைகளின் நடவடிக்கைகளை மேற்பார்வை செய்துவரத்தக்க அதிகாரமும் அனுபவமுமுள்ள ஒருவர் வேண்டும். அப்படிப்பட்டவரே இந்த "கோ-ஆபரேடிவ் சங்கங்களின் ரிஜிஸ்திரார்." இப்பொழுது அந்த வேலையிலிருப்பவர் திவான் பஹதூர் எல். டி. ஸ்வாமிகண்ணுபிள்ளையவர்கள். இவருக்கு முன்னிருந்தவர் திவான் பஹதூர் இராமச்சந்திரராயர்.

இந்த கூட்டுச்சங்கங்களில் பூர்வம் நமது ரிஷிகள் ஏற்படுத்திய வருணாசிரம தர்மம் எப்படி அனுசரிக்கப்பட்டுவருகிறது என்று கேட்கலாம். இந்தக் காலத்துக்குத் தக்கபடி, தொழிலினாலோ, வர்த்தக வியாபாரங்களினாலோ, வியவசாயத்தினாலோ, உத்தியோகம் உழைப்பு ஜீவனங்களாலோ, ஒருவிதத்தில் ஏகபாவ சம்பந்தப்பட்டவர்கள் பலர் தங்களுக்குப்பொதுவாயுள்ள குறை நிறைகளைத் தாங்களே பார்த்துக்கொள்ளும்பொருட்டு ஒருகூட்டுச் சங்கமாகச்சேர்ந்து, கூட்டு வியாபாரத்தைப்போல் லாபத்தையே பிரதானமாகக் கொண்டுழைக்காமல், கூட்டு வியாபாரத்தால் வரும் லாபத்தைத் தாங்கள் தானே யனுபவிக்கும்படியான சாதகங்களோடு, லாப சிந்தனையை விட்டு பரஸ்பரோபகாரத்தையே பெரிதாகக் கொண்டுழைக்கக் கங்கணங்கட்டித் தங்களில் வியவகார ஞானமும் பரோபகார சிந்தையும் சேர்ந்த

விவேகிகள் சிலரைத் தெரிந்தெடுத்துத் தலை நாட்டாமைக்காரர்களாகநியமித்து அவர்களுக்குவேண்டிய பொருள்களை அவர்கள் தாங்களே வாங்கி தங்களுக்குள் தாங்களே விற்றுக் கொள்கிறார்கள். இதனால் போட்டிப்பேய் அவர்களைப் பிடித்து ஆட்டுவதில்லை. அவர்கள் ஒருவருக்கு துரோகம்செய்வதுமில்லை. ஒருவர் தயவை யெதிர் பார்ப்பதுமில்லை. ஒருவருக்கு நஷ்டம் வரச்செய்ய வேண்டுமென்பதும் அவர்கள் கருத்தில்லை. தாங்கள் தனிச்சுள்ளிகளாக விருந்தபோது கண்டவன் போனவனெல்லாம் தங்களை அலக்ஷியமாக நடத்திவந்ததை பொறுக்காமல், "எத்தால் வாழலாம் ஒத்தால் வாழலாம்" என்கிற மூதுரையினுண்மையில் கட்டுப்பட்டவர்களாய் ஆளுக்குக் கொஞ்சம் சிறுதனம் சேர்த்துப் பெருமுதல் வைத்து, தங்களுக்கு வேண்டிய பொருள்களை மொத்தமாக வாங்குபவர்க்குக் கிடைக்கும் சரஸ விலைக்கு வாங்கி, ஊரொப்பந்தம் தங்களுக்குள் தாங்களே கடன் வியாபாரமின்றி ரொக்கத்திற்கு விற்றுக்கொண்டு, அதனால் வரும் லாபத்தைக் கடைசியில் தங்களுக்குள் கிரம விகிதமாகப் பங்கிட்டுக்கொள்கிறார்கள். இதில் கொள்பவனும் கொடுப்பவனும் ஏகமாயிருக்குந்தன்மையினால் மோசம்செய்ய ஹேதுவில்லை. மொத்தமாக வாங்கின சரக்கைப் பங்கிட்டுக் கொள்ள வியாபார முறையை யனுசரித்துச் சில சிப்பந்திகள் வைத்துக்கொள்கிறார்கள். இவர்கள் தங்களுக்குட்பட்டவர்களாக விருப்பதன்றி தங்களைப்போல் அந்த சங்கத்திலும் மெம்பர்களாக விருப்பவர்களாதலால் "எத்தால் வாழலாம் ஒத்தால் வாழலாம்" என்னும் தர்மக்கட்டுப்பாட்டுக்கு மீறி நடக்க ஹேதுவில்லை. அப்படிப் பிசகாய் நடந்துகொண்டால் உடனே கண்டிக்க அவர்களுடைய பிரதிநிதிகளிருக்கிறார்கள். அவர்களுக்கு சம்பளமில்லையாதலால் "அஹம்விருத்தி-பரசேவை" என்கிற தர்மத்துக்குக் கட்டுப்பட்டுழைக்கிறவர்களாக விருப்பார்கள். இப்படியாக இக்காலத்து வியாபார மோசத்துக்காட்படாமல், வியாபாரத்தால் வரும் லாபத்தையடைவதும், அதற்கு வேண்டிய வியவகாரங்களை நடத்தி வருவதால் வரும் சாமார்த்தியத்தில் தேறுவதும் அவர்களுக்குத் தலைப்பாடமாக ஏற்பட்டுவிடுகிறது. இதனால் தன்னலமழிக்கும் சுயநயப் பின்குணம் படியாது பரநயம் பாராட்டும் பெருங்குணம் படிவதோடு, இகலோக வியாபாரத்துக்கு வேண்டிய "அஹம்விருத்தியும்", பரலோக சாதனமான ஹிருதய சுத்திக்கு இன்றியமையாத "பரசேவை"க்குணமும் படிந்து அதனால் சத்குண சம்பத்து மேன்மேலுமுண்டாகி வளருவதற்குக் காரணமாகிறது! ஐயா! இப்படிக் 'கரும்புதின்னக் கூலியும்' கிடைத்ததுபோல், வியாபார மோசத்துக்குட்படாமல் நல்ல சரக்கும், நல்ல சரக்குகளோடு வருஷக்கடைசியில், அவைகளை மொத்தமாக வாங்கித் தங்களுக்குள் தாங்களே பகிர்ந்து கொள்வதால் வரும் லாபத்தில் பங்கும் ஆகிய இகலோக லாபங்களோடு பரோபகார விருத்திக்குக் காரணமான பரசேவைக்குணமும், அதனால் பரலோக சாதனமான வாய்மை, உறுதி, தீரம், ஹிருதயசுத்தி முதலிய பல உத்தம குணங்களும் சம்பவிக்குமானால் இதினும் மேலான சாதகம் வேறென்ன வேண்டும்! ஆகையால் நம்மவர்கள் முன்னுக்கு வரவேண்டுமானால் நெல்லிக்காய் மூட்டைகளாகச் சிரிந்து சீரழிந்தது போதுமென்று கண்டுணர்ந்து, "எத்தால் வாழலாம் ஒத்தால் வாழலாம்" என்னும் பரம தர்மத்தைமேற்கொண்டு அதை நித்தியப்படி ஜீவனத்தில் மேற்கொண்டொழுகி சன்மார்க்கத்தில் நடக்கக் கற்றுக்கொள்ளவேண்டும்! புருஷார்த்தங்களாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கின் தன்மையை ஔவையார் வெகு நன்றாக விளக்கியிருக்கிறார்.

"ஈதலறம் தீவினைவிட் டீட்டல்பொருள் எஞ்ஞான்
காதலிரு வர்க்குங் கருத்தொருமித்—தாதரவு [றும்
பட்டதே யின்பம்: பரனைநினைந்திம் மூன்
விட்டதே பேரின்ப வீடு."—ஔவையார்.

## THE RIGHT HON'BLE JOHN BURNS, M. P.

A LESSON FROM HIS LIFE.

He (Charles XII of Sweden) inspired me with the idea of triumphing over physical weakness, weariness and pain. To inure his body to bear all manner of hardships, indifferently to bathe in ice, or face the torrid rays of the sun, to discipline his physical powers by gymnastics, to make his body an instrument as tempered steel and at the same time to have that body absolutely at the disposition of the mind, that seemed to me, conduct worthy of a hero. And so, boylike, I tried to imitate him, and succeeded, at least so far as to be happily indifferent to the circumstances of my personal environment."—*John Bnrns.*

"The world is my country and to do good is my religion."—*Tom Paine's aphorism which affected the course of John Burns' life.*

"I have always held the view and I shall continue to hold it, that mere material improvement in man's environment, whether by Municipalities or States is not enough. Men are the sport of circumstances, when circumstances should be the sport of men. Just as one is compelled to divert one's passion into rational enjoyment, and disciplined pleasure, so, whilst uplifting men, women and children by Municipal and Imperial agencies, one must insist upon personal effort, individual will, the necessity of character, the obligation of sacrifice and control ; not too much officialism, less bureaucracy—in fact, a minimum of restriction, but example everywhere. We are a free people and it is better that men are taught that volition, initiative, and desire often yield, even with limited opportunities, a greater result for all than an over mechanised society that has only material improvements as its objective. "Man does not live by bread alone"......I mean...that it is not sufficient that society should consist of well-fed, regularly employed, materially prosperous people. Concurrent with that should go the higher qualities of civilization that spring from character, particularly on its Spartan side, which as history in the past proves, can be all too easily sapped by the allurements that prosperity yields, and against which the simplicity of a humbler standard of life is often a safeguard."—*The Right Hon'ble John Burns.*

## கைவேலை செய்துழைத்து கனம் பொருந்திய மந்திரி ஸ்தானத்துக்கு வந்தவரான ஜான் பர்ன்ஸ்.

"இஷ்டவிருத்தி"—"ஈசனருள்."

மகாகனம்பொருந்திய ஜான் பர்ன்ஸ் என்பவர் இப்பொழுதுக்கு முன்னிருந்த லிபரல் கவர்ன்மெண்டில் "லோகல் கவர்ன்மெண்ட் போர்டுக்கு ப்ரெஸிடெண்டாக" விருக்கும் மந்திரிவேலைவகித்திருந்தார். இவருடைய சரித்திரம் சிந்திக்கப் பயன்தரும் ரஸம் பொருந்தியதாயிருக்கிறது. இவர் மிகவும் ஏழை வம்சத்தில் பிறந்து 10-வயதிலே தன் ஜீவனத்துக்காகத் தானே யுழைக்கும்படி நேரிட்டது. முதல் முதல் மெழுகுவர்த்தி செய்யும் ஒரு வேலைச் சாலையில் கூலிவேலைக் கமர்ந்துழைத்தார். பிறது ஆபீஸில் சில்லரைச் சேவகத்திலமர்ந்தார். பிறகு இரும்பு வேலைக்கிடங்கில் பட்டந் தைக்கும் பையனாக வேலைசெய்து பிழைத்தார். இவ்வளவுழைத்தும் இப்பையனுடைய வருமானம் இவனுடைய சொற்ப ஜீவனத்துக்குப் போதாமையால் ஞாயிற்றுக்கிழமை தினம் சாராயக்கடையில் கூலிவேலைசெய்து வந்த லாபத்தைக்கொண்டு பிழைத்தார். இப்படி கஷ்டப்பட்டு ஜீவனம் செய்துவந்த பையன், ஒரு அணுவுக்கு ஒரு பழையபுஸ்தகம் வாங்கி வாசித்தார். அது ஸ்வீடன் தேசத்து 12-வது சார்ல்ஸ் அவர்களின் சரித்திரம். இந்த மன்னர் தேகவன்மை பொருந்தி தேகத்தை நன்றாகப் பழக்கி மனதுக்கிசைந்து நடக்கும்படி செய்து வந்த மஹாதீரர். இவருடைய சரித்திரத்தை வாசித்த ஜான் பர்ன்ஸ் என்னும் வாலிபனுக்கு இவரைப்போல் தானும், பசி, தாகம், சீதோஷ்ணம் இவைகளையெல்லாம் சகிக்கத்தக்கதாகத் தன் தேகத்தைப் பழக்கிப் பதமிட்டு எஃகு போல் வணங்கி வரச்செய்து கொள்வதோடு, மனதுக்குட்பட்டு மனோவசப்பட்ட தேகமாகவிருக்கும்படி தன் தேகத்தைப் பழக்கிக்கொள்ளவேண்டுமென்று ஆசையுண்டாயிற்று. உண்டாகவே, பனியில் நனைந்து வெய்யிலில்

காய்ந்து, ஆகாரங்களில் சொகுஸ்பாராமல் கிடைத்ததைப்புசித்துப், புசித்ததை நன்றாக ஜீரணிக்கச் செய்யும்படியான வன்மைபொருந்தியதாய்ச் செய்துகொண்டார். இதனால் இச்சிறுவன் எவ்வளவோ ஜீவனோபாயத்துக்காகக் கஷ்டப்பட்டுழைக்க வேண்டியிருந்தும் அந்த தேககஷ்டங்களையெல்லாம் லக்ஷியம்செய்யாது தன் மனதையும் விர்த்திசெய்து கொள்ளவேண்டி அபாரசிரமம் வகித்துழைக்கத் தீர்மானிக்கவும், தீர்மானித்தபடி நடக்கவும் சாத்தியமாயிருந்தது. இப்படி ஜீவனத்துக் குழைத்துக் கூலிவேலை வாங்கி ஜீவனம் செய்து வருகையிலும் வேலைசெய்து வருந்தியிளைத்த பின் இளைப்பினால் களைமீறாது தன்தேகத்தை மனோசக்தியால் திடப்படுத்திக் கொண்டு, மேன்மேலும் அனேக புஸ்தகங்களை வாசித்து வருகையில், இவர் 'ஜனசாமான்னிய தர்மம்' என்று சொல்லும் எல்லா ஜனங்களும் ஈசுவரனுக்கு சமமானதால், ஈசுவர சிருஷ்டியாம் ஜகத்திலுள்ள சுகபோகங்களை எல்லாரும் சமமாக அனுபவிக்கப் பாத்தியப்பட்டவர்களாக விருக்கிறார்கள் என்கிற "ஸோஷியாலிஸம்" என்று சொல்லும் ஜனசாமன்னிய தர்மத்தை யனுசரித்துழைக்கும் ஒரு கக்ஷியார் அபிப்பிராயங்களை யனுசரித்து அவர்கள் கொள்கைகளை யங்கிகரித்தனுஷ்டிப்பவரானார். இவர்களுடைய பிரதமக் கொள்கை யென்னவென்றால், ஜகம் எல்லாருக்கும் பொது: ஜீவன்களெல்லாரும் சமமாக ஜீவித்து சுகித்திருக்க பாத்தியப்பட்டவர்களாயிருக்கிறார்கள். ஏழை தனவந்தன் என்கிற வித்தியாசங்கள் மனுஷன் தானாக ஏற்படுத்தினவேயன்றி இயற்கை தர்மத்தில் அவை ஏற்படவில்லை யென்பதே. இதற்கு மாறாகவுள்ள சட்டதிட்ட துறைத்தன ஏற்பாடுகளையெல்லாம் இதற்கு அனுகுணமாகத் திருத்தவேண்டுமென்பது இவர்கள் கோறிக்கை. இதற்காக இவர்கள் கங்கணங்கட்டி யுழைத்துவந்தார்கள். இப்படி உழைத்து வந்தவர்களில் சிரேஷ்டர்களாயுள்ளவர்கள் தர்மங்களையாராய்ந்து அனுஷ்டிக்கத் தலைப்பட்டபொழுது "இவ்வுலகெலாம் எனக்கு ஸ்வதேசம், நலஞ்செயல் ஒன்றே உண்மையாய் நான் கொண்டாடும் மதம்" என்று மிஸ்டர் டாம் பெயின் என்பவர் சொல்லிவந்த ஸத்ய வாக்கியம் இவர் மனதைக்கவர்ந்து இவரை அவ்வழியில் நடக்கச்செய்தது. இந்த உண்மையையே, இன்னும் தூக்கி நமது வேதங்கள் "ஸத்யம்வத: தர்மம்சர!" என்று கோஷிக்கின்றன.

இப்படி சிறுகச் சிறுக சாமான்ய ஜனங்களின் க்ஷேமத்தை நாடி கனதனவந்தர்கள் செய்யும் அக்கிரமத்தை யடக்க வுழைக்கும் உத்தமர்களில் இவர் ஒருவராக முன்னுக்கு வரத் தலைப்பட்டார். அப்பொழுது ஜனங்களைக்கூட்டி அவர்களுக்கு ஹிதபோதம் சொல்லி அக்கிரமங்களை யெதிர்த்துப் பேசிவரும் போது போலீஸ் அதிகாரிகள் இவர்களை "கலகக்காரர்கள்" என்று பிடித்துக் காவல்படுத்தி போலீஸ் கோர்ட்டில் கொண்டுபோய் தண்டித்து வந்தார்கள். இப்படி எத்தனையோ தரம் போலீஸாரோடு மன்றாடி, ஒருமுறை ஜயிலுக்கும்கூடப் போயிருந்து வந்தார். லண்டனிலுள்ள "ஹைட்பார்க்" என்னும் பொதுத்தோட்டத்தில் இவர் பிரசங்கம்செய்து வந்தபொழுது போலீஸார் இவரைப் பிடித்திழுத்துச் சிறைப்படுத்தி முரட்டுத்தனமாகக் கோர்ட்டுக்கிழுத்துச் சென்றார்கள். அப்பொழுது இவருடைய மேன்மையையும் தைரியத்தையும் பார்த்து ஆச்சரியப்பட்டு பிரமித்து நின்ற மிஸ் சார்லோட்டி கேல் என்னும் ஒரு இளமாது இப்படிப்பட்ட தீரனை மணந்து இவனுக்குப் பக்க பலமாயிருந்துதவவேண்டுமென்று மனசில் தீர்மானித்துக்கொண்டு காத்திருந்தாள். ஜெயிலை விட்டு வந்ததும் அப்பெண்ணரசி அவர் பெருமையையும் தீரத்தையும் கொண்டாடித் தன்னை அவருடைய வாழ்க்கைத் துணையாக அங்கிகரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளத் துணிந்தாள். அந்தப் பெண்மணி, இப்பொழுது அவருடைய மனதுக்கிசைந்த மனைவியும கிரகத்துக்

கிசைந்த தலைவியுமாகவிருந்து அவருக்கு உற்றதோர் வாழ்க்கைத் துணையாயிருந்து அவருடைய இல்லறம் சிறக்கச்செய்து வருகிறார். அவர் முன்னுக்கு வந்து சிறப்பெய்தியது அந்த அம்மாளுடைய உதவியினாலேயே யென்று அவரே ஒப்பிக்கொள்கிறார்.

மிஸ்டர் ஜான் பர்ன்ஸ் விவாகமாகுமுன் தென்னாபிரிகாவில் இஞ்சினீராக வேலை செய்துவந்தார். அங்கே பேரும் கீர்த்தியும் பெற்று இங்கிலாந்துக்குத் திரும்பிவந்து "கௌன்டி கௌன்ஸில்" மெம்பராக ஜனங்களால் தெரிந்தெடுக்கப்பட்டு, ஏழைகளில் ஏழையாய் ஏழைகளுக்குதவியாய் வெகுபாடுபட்டுழைத்து வந்தார். 1886-ம் வருஷத்தில் மறுபடியும் அதிகாரிகளுக்கும் ஜனங்களுக்குமுண்டான சச்சரவில் இவர் சிறைப்பிடித்து 3-மாசம் காவலிலிடப்பட்டார். ஆனாலும் இவர் ஒன்றுக்கும் அஞ்சாது பொதுவிஷயத்தில் மனம் கவிந்து பொதுக்ஷேமமே பெரிதாகவுழைத்துவந்தார். இவர் "கௌன்டி கௌன்ஸில்" மெம்பராக வந்தபின், இவருடைய டிஸ்திரிக்ட்டில் ஏழைகளுக்குவேண்டிய உதவிசெய்துழைப்பதில் அதிக சிரத்தையெடுத்து வந்தார். இவர் ஏழைக்கெளியவர் என்றும் ஏழைபங்காளியென்றும் ஜனங்கள் இவரைக் கொண்டாடி வந்தார்கள். பிறகு பார்லிமெந்து சபையில் மெம்பராக வந்து பல வருஷங்கள் அம்மகா சபையில் தன்னுடைய சாமர்த்தியத்தைக் காட்டி ஏழைகளுக்குச் சகாயமாக வுழைத்துவந்ததில், இவரைப்போல் கைவேலைசெய்து உழைத்து முன்னுக்குவந்த அனேகர் இப்பொழுது பார்லிமெந்து சபையில் மெம்பர்களாக வர ஏற்பட்டு, இவர்கள் கக்ஷி பலப்படலாயிற்று. பலப்படவும் அக்கக்ஷிக்கெல்லாம் தலைவராய் விளங்கிய இவர் புதிதாய் ஏற்பட்ட லிபரல் கவர்ன்மெண்டில் ஸ்தானீக சுய ஆக்ஷித்தலைவராக மந்திராலோசனை சபையில் முதல்மந்திரி முதலானவர்களோடுகூடவிருந்து ஆலோசனை சொல்லும் அந்தஸ்துப் பெற்றவரானார். இந்தப் பதவிக்கு வருமுன்னரே, மாக்ஷிமைதங்கிய நமது அரசர், இவரைத் தமது சொந்த ஆலோசனை சபையில் (Privy Council) ஒரு மெம்பராகவிருக்க நியமித்துவந்தார். கைவேலை செய்துழைத்து கனம்பொருந்திய மந்திரி ஸ்தானத்துக்கு வந்த இவர், ஏதோ காட்டாள், மோட்டாளாகவில்லாமல், ஸர்வகலாசாலையில் படித்துத் தேறிப் பரம்பரையாக இராஜதுரந்தரர்களாயிருந்த பிரபுக்கள் பிரமுகர்கள் வமிசத்தில் பிறந்த பிரபுக்கள் வித்துவான்களுக்குச் சரியாக அந்தஸ்துவகித்து ஆலோசனை சொல்வதன்னியில், இவருடைய கொள்கைகளும் அபிப்பிராயங்களும் மூலதத்துவங்களை யொட்டினவைகளாகவும், இரண்டு சொல்ல சாத்தியமில்லாதனவாகவு மிருக்கின்றன. உதாரணமாக, ஜனக்ஷேம விர்த்தியைப்பற்றி இவர் ஆதிமுதல் கொண்டிருந்து இப்பொழுது பின்னும் அதை வற்புறுத்திக் கூறின கொள்கை மிகவும் மேலாகவும் உத்தமமாகமிருப்பது பின்வரும் அவர் அபிப்பிராயத்தால் விளங்கும். அவர் சொல்கிறார்:—

"மனுஷன் விர்த்திக்குவர முனிசிபாலிடிகளாலும் சர்க்காராலும் தனதான்ய சுகசம்பத்துக்கள் விர்த்தியாகமட்டும் செய்தால் போதாது என்பது ஆதிமுதல் நான் கொண்ட கொள்கையாயிருக்கிறது. இன்றைக்கும் அதை மாற்றாமல் நாளைக்கும் அதுவே உண்மையாகக் கொள்ளத்தக்கது என்று கொண்டிருக்கிறேன். மனிதர்கள் சந்தர்ப்ப வசப்பட்டவர்களாயிருக்கிறார்கள். அப்படிக்கின்றி சந்தர்ப்பங்கள் மனிதர் வசப்பட்டனவாகவும் அவர்கள் லீலா விநோதமாக உபயோகிக்கத் தக்கனவாகவு மிருக்கவேண்டியது கிரமம். மனுஷன் பிரத்தியேகத்தில் காமமோஹாதி தாபங்களை யடக்கி யுக்தானுசாரமாய் அவைகளையனுபவிக்கப் பழக்க வேண்டியதவசியமாயிருப்பதுபோலவே, பொதுக்ஷேமத்திலும் முனிசிபாலிடிகள் மூலமாகவும் சர்க்கார் உதவியினாலும், ஜனக்ஷேமத்துக்கடுத்த சாதன சாதகங்களை விர்த்திசெய்து வருகையில், ஜனங்கள் தாமே தங்கள் சொந்த முயற்சியாலும் இஷ்டப்பிரயத்தனத்தாலும், சத்குணசம்பத்தாலும், கர்மபலத்தியாகத்தாலும், தன்னடக்கத்தாலும் முன்னுக்குவர முயற்சித்துழைக்கும்படி செய்யவேண்டியது அத்யாவசியமாயிருக்கிறது—அதாவது அதிகார வரம்பும், உத்தி

யோகஸ்தர் கட்டுப்பாடும், குறைந்துவர, எங்கும் ஜனங்கள் தன்முயற்சியால் முன்னுக்குவர உதாரணங்காட்டி யுழைப்பவர்களாக விருக்க வேண்டும். நாம் (ஆங்கிலேயர்) ஸ்வதந்தர புருஷர்கள்; ஆகையால் ஜனங்கள் தன்னிச்சையாலும், தன்முயற்சியாலும், ஸ்வசங்கல்பத்தாலும் (அனேக இக்கட்டுகளுக்குட்பட்டுழைக்கவேண்டியிருப்பினும்) எவ்வளவோ முன்னுக்குவரலா மென்பதையுணர உணர்த்த வேண்டும். பஹிர்முகசுகத்தையே நாடி தன விருத்தி யொன்றிலே மனமூன்றி சட்டதிட்ட கட்டுப்பாடுகளெல்லாம் அதற்கனுகூலமாக அமைந்து ஸ்வசிந்தையும் ஸ்வமுயற்சியும் அதிகமாக வேண்டியிராமல், யந்திரம்போல் நடந்துவரும் இராஜாங்க ஏற்பாடு அமையப்பெற்ற ஜனசமூகத்தைவிட, ஸ்வசிந்தையும் ஸ்வமுயற்சியும் பொருந்திய ஸ்வதந்திர ஜனங்களமைந்த ஜனசமூகம் சீக்கிரத்தில் மேன்மையடைந்து முன்னுக்குவரக் காரணமாகும். மனுஷன் வயிறு வளர்க்கவென்றே பிறந்தவனல்ல. வயிற்றுப்பாட்டோடு அவன் புத்தி சித்தம் விர்த்தியடைந்து அறிவு விர்த்தியடையப் பாடுபட்டுழைப்பது மிகவும் அவசியமாயிருக்கிறது. உண்டு கொழுத்த காளைகள் நிறைந்த ஜனசமூகம் மேலானதல்ல. அஹம் விருத்தி, பரசேவை இவைகளால் ஸ்வாத்ம விருத்தியும் ஸ்வக்ஷேமநாட்டமும் பொருந்திய மனிதர்கள் இருக்கும் ஜனசமூகமே விர்த்தியடைந்து முன்னுக்கு வருமென்பது என்னுடைய சித்தாந்தம். ஆகையால் ஐசுவரிய விர்த்தியால் உண்டுடுத்துறங்கி சுகித்து மிருகப்பிராயமாய் வளரும் ஜனங்களைவிட, கஷ்டஜீவனம்செய்து, இஷ்டவிருத்தியை நாடும் ஜனங்கள் மிகுந்திருப்பதே நாட்டுக்கு நன்மை பயப்பதாம்" என்று அவர் தம் அபிப்பிராயத்தைக் கூறியிருக்கிறார். இஷ்டவிருத்தி யென்றால் "கண்டதே காட்சி கொண்டதே கோலம்" என்று திரிவதில்லை, திருமூலர் திருமந்திரோபதேசத்தில் திருவாய்மலர்ந்தருளியபடி "இஷ்டவிருத்தி" முதிர்ந்தால் அதுவே "ஈசனருளு"மாம்.

"கொட்டுக்குந்தாலியிரண்டேயிரண்டுக்குங்
கொட்டுக்குந்தாலிக்கும் பாரைவலிதென்பர்
கொட்டுக்குந்தாலிக்கும் பாரைக்குமூன்றுக்கும்
மிஷ்டம்வலிதென் பரீசனருளே."

## TRAVEL AND DESCRIPTION.
## யாத்திரை க்ஷேத்திர வர்ணனை.

### AYODIYA.
### அயோத்தி.

அலகாபாத்திலுள்ள டேராகஞ்சுக்கு சமீபத்திலுள்ள அல்லன்கஞ்சு ரயில் ஸ்டேஷனில் வண்டியேறி வடக்காக பிரதாப்கர் என்ற சந்திப்பு ஸ்டேஷனைக்கடந்து அயோத்திக்குச் செல்லவேண்டும். இந்தி பிரதாப்கர் என்பது ஒரு சிறிய இராஜ சமஸ்தானம் ஸ்டேஷனிலிருந்து சுமார் மூன்றுமைல் தூரத்திலுள்ள ஒரு அழகான பட்டணம். ஸ்டேஷனுக்கு சமீபத்திலேயே சில கடைகளும் வீடுகளும் காணப்பட்டாலும் தாமதிக்க சற்றும் வசதியானதன்று. திருடர்களும் போக்கிரிகளும் அதிகம். வண்டியொன்றுக்கு எட்டணா கொடுத்தால் பட்டணம் சேரலாம். இவ்விடத்தில் இறங்குவதற்கு தகுந்த இரண்டு மூன்று தர்மசாலைகளிருக்கின்றன. பட்டணம் கூடியவரையில் அதிக சுத்தமாகவும் நேர்த்தியாகவும் காணப்படுகிறது. இராஜருடைய அரண்மனை அதிக அலங்காரமானகட்டடம். சில தெருவுகள் மட்டும் விஸ்தாரமானதாகக் காணப்படுகிறதேயன்றி மற்றவைகள் பெரும்பாலும் சந்துகள். அலகாபாத்திலிருந்து அயோத்திக்கு நேராக வண்டிகள் செல்கிறதில்லையாதலால் யாம் இந்த ஊரில் ஒருநாள் தங்க நேர்ந்தது. இவ்விடத்திலிருந்து இரவு ஒரு மணிக்குப் புறப்படுகிற வண்டியில் ஏறினால் மறுநாட்காலை எட்டு மணிக்கு அயோத்தி சேரலாம். இது ஒரு சிறிய ஸ்டேஷன். இதற்கு அயோத்தியாகாட் என்று சொல்லப்படுகிறது. ஸ்டேஷனிலிருந்து பட்டணம் அதிகதூரமன்று. அரை மைல் தூரம் சென்றால் நாட்டுக்கோட்டை செட்டிமார்களுடைய சத்திரம் சேரலாம்.

இந்த க்ஷேத்திரமானது வைகுண்டத்திற்கு சமானமானதென்றும், இதின் முக்கிய பாகமானது சுவயம்பு மனுவால் வைகுண்டத்திலிருந்து பூலோகத்திற்குக் கொண்டுவரப்பட்

டதென்றும், இதற்கு சாகேதபுரி, சக்திபுரி, விமலை என்ற பெயர்களுண்டென்றும், ஸ்ரீ மகா விஷ்ணுவுக்கு இந்த அயோத்தி முகம் போன்றதென்றும், இதில் பிர்ம்மகுண்டம், தசரதகுண்டம், பிரகஸ்பதிகுண்டம் முதலிய அநேக தீர்த்தங்களிருக்கின்றன வென்றும், இதில் பிரவேசித்து ஓடும் சரயு நதிக்கு இராமகங்கா, வசிஷ்டா என்ற பெயர்களுண்டென்றும், இந்தப்பட்டணம் ஆதியில் வைவசுவத மனுவினால் கட்டப்பட்டதென்றும், இது ஒருவராலும் ஜயிக்கப்படாதபடி அவ்வளவு உன்னத காப்புகளை யுடையதாயிருந்தபடியால் இதற்கு அயோத்தி என்றபெயர் கொடுக்கப்பட்டதாகவும், கூறப்படுகிறது.

தசரத சக்கரவர்த்தியால் 60,000-வருஷம் ஆளப்பட்டதும், அவர் குமாரரும் மகாவிஷ்ணுவின் அவதாரமுமான ஸ்ரீராமரால் 12,000 வருஷகாலம் இராஜ்ஜியபாரம் வகிக்கப்பட்டதுமானவிடமிதுவே என்றால் அதற்கு வேறு சிறப்பு என்னவேண்டும்? அன்றியும், ஸ்ரீராமர் தம் தம்பிமார்களுடன் அந்திகாலத்தில், சரயு நதியிலிறங்கி தேகத்தோடு வைகுண்டம் சென்றதாகக் கொண்டாடப்படுவதால், சரயு நதியில் ஸ்நானஞ் செய்கிறவர்களுக்கு பலனை விளக்குவதாயிருக்கிறது. இது பூர்வத்தில் 200-மைல் நீளமும் 72-மைல் அகலமு முள்ள பிரமாண்டமான பட்டணமாக விருந்ததாகவும், ஸ்ரீ காசியே இதற்கு மயான பூமியாக விருந்ததாகவும் கூறப்படுகிறது. பிறகு நேர்ந்த கலகங்களால் பலதடவைகளில் அழிவுற்றும், பலதடவைகளில் புதுப்பிக்கப்பட்டும் வந்ததில் கடைசியாக கி. மு. 87-க்கு முந்தி விக்கிரமார்க்க ராஜனுடைய வசமாகி புதுப்பிக்கப்பட்டு சுமார் 400 ஆலயங்கள் வரையில் கட்டப்பட்டு உன்னத ஸ்திதியிலிருந்ததாகவும் தெரியவருகிறது. மேற்படி விக்கிரமார்க்க ராஜனால் கட்டப்பட்டதாக சொல்லப்படுகிற ஸ்ரீராமர் ஆலயம் ஒன்றே தான் இப்பொழுது நல்ல ஸ்திதியிலிருக்கிறது.

தற்காலம் இந்த அயோத்தி மாகாணமானது 24,050 சதுரமைல் விஸ்தீரணமுள்ளதும், இலக்ஷ்மணபுரி என்ற லக்நோவை தலைமை பட்டணமாகக் கொண்டதும். பைசாபாத்து, அயோத்தி, பிரதாபகர், பாரியகர், கொண்டா, சீதாப்பூர் முதலிய சில பட்டணங்களையுடையதுமான செழிப்பான நாடு என்பதில் தடையில்லை. நெல், கோதுமை, சோளம், கரும்பு, பருத்தி, புகையிலை, அபினி, முத்துக்கொட்டை முதலியவைகள் ஏராளமாய் விளைவிக்கப்படுகின்றன. சரயு நதியோரத்தில் உருளைக்கிழங்கு, கத்தரி, வெள்ளரி, வாழை முதலியவைகள் பயிர் செய்யப்படுகின்றது.

இப்பொழுது இந்த அயோத்தி பட்டணமானது சரயு நதியின் தென்பக்கத்தில் சுமார் 12-மைல் சுற்றளவுள்ளதாயும், நதியின் ஓரத்தில் தகுந்த மாதிரியான படிக்கட்டுகளை கட்டியதாகக் காணப்படாதபோதிலும் இலக்ஷ்மணகாட், இராமகாட், சுகிரிகாட் என்ற பல நாமங்களையுடைய ஸ்நான கட்டடங்களை யுடையதாயும், விசாலமான பல தெருக்களை யுடையதாயும், மூன்று, நான்கு அடுக்கு மெத்தைகளுடைய பல வீடுகளையுடையதாயும், ராவணனுடைய மூலபலச்சேனைகள் யுத்தத்திற்கு வெளிப்பட்டபோது அங்கும் இராமன், இங்கும் இராமன், எங்கும் இராமன் என்று கூறும்படி ஒவ்வொருவரும் ஸ்ரீராமராகக் காணப்பட்டதாகக் கூறப்படுவதுபோல ஒவ்வொரு வீட்டிலும் கட்டடத்திலும், சத்திரத்திலும், தர்மசாலையிலும், சீதா, லக்ஷ்மண, பரத, சத்துருக்னர், அநுமத் ஸமேதராக ஸ்ரீராமரை சலவைக்கல் முதலியவைகளில் திவ்விய விக்கிரகங்களாகச் செய்து, பலவித ஆபரணங்களாலும் பட்டாடைகளாலும் அலங்கரித்து திவ்வியமான மண்டபங்களில் பொன்மயமான சிம்மாசனங்களில் கொலுவைத்து தினப்படி பூஜை, நைவேத்தியம், தூபதீபாராதனைகளை வெகு விமரிசையாகச் செய்து வருகிறார்கள். இப்பேர்க்கொத்த ஆலயங்கள்

சுமார் 2000 - த்திற்கு அதிகமாக விருக்கலா மென்று மதிக்கலாம். இவைகளில் முக்கியமானவை:

1. கனகபூவனம்.—என்பது தர்பங்கா இராஜால் கட்டப்பட்டது. மூன்றடுக்குமெத்தை யுள்ளது. மண்டபம் வெகு விநோதமான கட்டடம். பொன்னினால் செய்யப்பட்ட சிம்மாஸனத்தில் ராமர் இலக்ஷ்மணர் முதலியவர்களுடைய விக்கிரகங்கள் வெள்ளைக்கற்களால் செய்யப்பட்டு அதிக விலைபெற்ற ஆபரணங்களால் அமைக்கப்பட்டிருக்கிறது. விக்கிரகங்கள் உயிருடனிருப்பதுபோலவே காணப்படுகின்றன.

2. இரத்தினபூவனம்.—இது ஒரு இந்து அரசரால் கட்டப்பட்ட பிர்மாண்டமான கட்டடம். இதற்குள்ளிருக்கும் இரத்தன பூவனம் என்ற மண்டபம் வெகு விநோதமும் வேலைப்பாடுமுள்ளது. சிம்மாசனமானது பொன்னினால் செய்யப்பட்டு நவமணிகளால் பிரகாசிக்கின்றது. இராமர் விக்கிரகமும் பரதர் விக்கிரகமும் நீலகற்களினாலும் இலக்ஷ்மணர், சத்துருக்னர், சீதை இவர்களுடைய விக்கிரகங்கள் வெள்ளைக் கற்களாலும் செய்யப்பட்டிருக்கின்றன.

3. சிரோர்ப்ராஜா மண்டபம்:—இது வெள்ளைக் கற்களாலேயே கட்டப்பட்ட இரண்டு கோபுரங்களோடுகூடிய அழகான கட்டடம். இந்த கோபுர கலசத்தின்பேரில் பொன்னால் செய்துவைக்கப்பட்ட ஒரு மயிலும், ஒரு பெரியஸர்ப்பமும் வெகு விநோதமாகவும் பயங்கரமாகவும் காணப்படுகிறது. இவ்வாலயத்தில் இரண்டிடத்தில் இராமலக்ஷ்மணர்களுடைய விக்கிரகங்கள் அலங்கரிக்கப்பட்டு வைக்கப்பட்டிருப்பதுடன் வேதவியாசர் பாரதபடனஞ் செய்வதுபோல விக்கிரகம் செய்தும் வைக்கப்பட்டிருக்கிறது.

4. சீதையின் ஸ்வர்ணவிக்கிரகம்:—இது ஒரு பெரியதும் புராதனமுமானகட்டடம். ஸ்ரீராமர் அஸ்வமேதயாகம் செய்யும் காலத்தில் சீதை வனத்திலிருந்தபடியால் அவ்வம்மைபோல் பொன்னால் ஒரு விக்கிரகம் செய்து யாகத்தைநடத்தியதாகவும், அந்த பொன்விக்கிரகமே இப்பொழுதும் இந்தஆலயத்திலிருக்கிறதாகவும் கூறுகிறார்கள். தவிர பிற்காலத்தில் இராம லக்ஷ்மணர்களுடைய விக்கிரகங்களும் பொன்னாலேயே செய்துவைக்கப்பட்டதாகவும் சொல்லுகிறார்கள். சீதையம்மன்விக்கிரகம் அதிக சிறியதாகவிருந்தபோதிலும் வெகுலக்ஷணமாயும் உயிர்க்களையுள்ளதாயும் காணப்படுகிறது. இதை தரிசிக்கவிரும்புகிற ஒவ்வொரு குடும்பத்தாரும் ஒருரூபாய் கொடுக்கவேண்டும். இரவு ஏழு மணிக்குமேல்தான் தரிசிக்கமுடியும். பகலில் யாவருக்கும் தரிசனஞ்செய்ய முடியாது. ஏகாதசி தினங்களில்மட்டும் யாவரும் இலவசமாகப் போய்தரிசிக்கலாம்.

இராமர் ஜெனன ஸ்தானம்:—இப்பொழுது இது ஒரு சிறியகோவில். சுமார் 12 அடிநீளமும் 15 அடிஅகலமும்கொண்டதாய் 8 - அடி உயரமுள்ள கட்டடம். மனிதர்கள் உள்ளே தாராளமாய்ச் செல்லமுடியாது. ஒரு பண்டா (ஸ்தானீகர்) இவ்விடத்தில் இராமலக்ஷ்மணர்களுடைய விக்கிரகங்களை வைத்துக்கொண்டும், ஸ்ரீராமர் ஜெனனஸ்தானத்தில் ஒரு சிறியகட்டிலும் அதன்மேல் பட்டினால் செய்யப்பட்டமெத்தை, திண்டு, தலையணை முதலியவைகளையும் வைத்துக்கொண்டு தரிசனஞ்செய்ய வருகிறவர்களிடம் விக்கிரகம், படுக்கை முதலியவைகளைக்காட்டி பைசா வாங்குகிறார். இதற்கு அடுத்தது பெரியதான மகம்மதியர்களுடைய கோரி. ஸ்ரீராமருடைய ஜெனனஸ்தானத்திலிருந்த பிர்மாண்டமான ஆஸ்தானமண்டபத்தை யிடித்து இந்தகோரி கட்டப்பட்டதாகவும், பிற்காலத்தில் பலதடவைகளில் மகமதியர்களுக்கும், இந்துக்களுக்கும் இந்தவிஷயமாய் கலகங்கள் நடந்து கடைசியாக அக்கோரியின் வாயிலிலேயே இப்பொழுதிருக்கிற இந்த ஆலயம் கட்டப்பட்டதாகவும் கூறப்படுகிறது.

கோரியினுடைய வாயிலும் மூடப்பட்டே கிடக்கிறது. இந்தவிடத்தில் எப்பொழுதும் ஒரு திவ்வியமான வாசனையுள்ள காற்று அடித்துக்கொண்டே யிருக்கிறது. இதற்கு சமீபத்தில் அழிந்துபோன பலகட்டடங்களின் அஸ்திவாரம் முதலிய குறிகளை இன்றும் காணலாம்.

அநுமார் சந்நிதி.—இது இலக்ஷ்மணகட்டத்திலிருந்து ஒருமைலில் தூரத்தில் ஒரு சிறிய குன்றின்பேரிலுள்ள பெரிய ஆலயம். இம்மலைக்கு செல்வதற்கு பலமானகற்படிகள் கட்டியிருக்கிறார்கள். துளசிதாசர் இந்தவிடத்தில்தான் தங்கி அன்னதானஞ்செய்துக் கொண்டுவந்ததாகவும், அநுமார் இந்தவிடத்தில்தான் அவருக்கு பிரத்தியக்ஷமாகி ஸ்ரீராமபிரானை தரிசனஞ்செய்யத் தகுந்த வழிகளை யுபதேசித்ததாகவும், இப்பொழுது இவ்விடத்தில் பூஜிக்கப்படும் அநுமார் விக்கிரகம் மேற்படி துளசிதாசர் பிரதிஷ்டை செய்து வைத்து பூஜித்ததென்றும் கூறப்படுகின்றது. இந்த ஆலயத்தில் தினப்படி 500—600,பைராகிகளுக்கு அதிக உபசாரமாக அன்னபானாதிகள் அளிக்கப்படுகிறது. இம்மலையின் மீதுள்ள கட்டடம் வெகு பலமாகவும் அழகாகவும் கட்டப்பட்டது.

அயோத்திராஜா மஹால்,—இது சுமார் இரண்டு மைல் சுற்றளவுள்ள விஸ்தாரமான விடத்தில் வெகு அழகாகவும் கம்பீரமாகவும் கட்டப்பட்ட அரண்மனை. அரண்மனைவாசலுக்கு எதிர்ப்புறத்தில் இரண்டு சிறிய கோவில்கள் கட்டப்பட்டிருக்கின்றன. ஒன்றில் அநுமாரும் மற்றொன்றில் கருடரும் காணப்படுகிறார்கள். வில்வளைவான வாயிலின் இருபுறத்திலும் இரண்டு சிம்ம உருவங்கள்செய்து வைக்கப்பட்டிருப்பதுடன் இரண்டு பெரிய பீரங்கிகளும் வைக்கப்பட்டிருக்கின்றன. உள்ளே யாவரும் சென்று பார்க்கலாம். உள்ளே சென்றால், நடுவில் சுமார் 200—கஜ அகலமும் நீளமுமான காலியிடம் விடப்பட்டு சுற்றிலும் மூன்றடுக்குள்ள மெத்தை கட்டடம் காணப்படுகிறது. இந்த கட்டடங்களில் பல ஆபீஸ்களிருக்கின்றன. இதைக்கடந்து உட்சென்றால் இதே மாதிரியான ஒரு காலியிடமும் சதுரமான கட்டடமும் காணப்படுகிறது. இந்த கட்டடங்களில் கஜானவும், அதைச் சேர்ந்த ஆபீசுகளும், போலீஸ் டாணவுமிருக்கின்றது. இதையடுத்ததும் முன் சொன்ன மாதிரியான சதுரகட்டடம் இதில் ஆயுதசாலையும், புஸ்தகசாலையும், வைத்தியசாலையும், அரண்மனையைச் சேர்ந்த பண்டசாலையு மிருக்கின்றன. இதற்குப் பின்புறத்தில் ஒரு அழகான சிங்காரவனம். பல விதமான புஷ்பச் செடிகள் இலக்ஷணமாக வைக்கப்பட்டு பரிபாலித்து வரப்படுகின்றன. இதில் இளைப்பாறுவதற்கு பல விடங்களில் பெஞ்சுகள் போடப்பட்டிருப்பதன்றி இரவு வெளிச்சத்திற்காக இலாந்தர்களும் போடப்பட்டிருக்கின்றன. இதைப் பார்த்துக்கொண்டு சற்றுதூரம் சென்றால் ஒரு அழகான ஆலயத்தைக்காணலாம். இதில் விஸ்வநாதலிங்கம் என்ற நாமத்தோடு ஒரு சிவலிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டு திரிகாலங்களிலும் பூஜை முதலியவைகள் அதிக சிரத்தையுடன் செய்யப்பட்டு வருகிறது. இந்த ஆலயத்தின் முன் இந்த சமஸ்தானபதிகளாகவிருந்த அரசர்களுடைய உருவப் படங்களை வைத்திருக்கிறார்கள். இந்த ஆலயத்தின் பின்புறத்திலும் சிங்காரவனம் சூழ்ந்திருக்கிறது. இந்த இராஜருடைய பூர்வ அரண்மனை நாட்டுக்கோட்டை செட்டிமார்களுடைய சத்திரத்திற்கு எதிரிலிருக்கிறது. இதுவும் பலமான கட்டடமே என்றாலும் நாகரீகமானதன்று.

இவைகளைத் தவிர வடதேசத்திலுள்ள ஒவ்வொரு இராஜாவும், ஜமீன்தாரரும், பிரபுவும்இந்த ஸ்தலத்தில் ஒவ்வொரு கட்டடத்தை தன் யோக்கியதைக்குத் தகுந்த விதம் கட்டி அதில் இராம லக்ஷ்மணர்களுடைய விக்கிரங்களை யமைத்து, பூஜை முதலியவை

களை நடத்திவருகிறார்கள். அன்றியும் பைராகிகளுக்கும் மற்ற பரதேச யாத்திரைக்காரர்களுக்கும் அன்னமளிக்கிற தர்ம ஸ்தாபனங்களும், சதாவிர்த்தி என்பதாக, கோதுமைமாவு, துவரைப்பருப்பு, நெய், வெல்லம் முதலியவைகளைக் கொடுக்கிற தர்மசாவடிகளும் ஏராளமாயிருக்கின்றன. பட்டணத்தைச்சுற்றி எந்தப் பக்கங்களில் பார்த்தாலும் வெகுதூரம் வரையில் இடிந்து அழிந்துபோன கட்டடங்களையும் மா, புளி, வேம்பு முதலிய மரங்கள் அடர்ந்த தோப்புகளையும் காணலாம். ஒரு காலத்தில் மண்மாரியடித்து பட்டணமே யழிந்து போயிருக்குமென்று எண்ணும்படியாக சிலமரங்களின் அடிபாகம் சுமார் 25-அடிவரையில் ஒரு வகையான சாம்பல்போன்ற மண்ணால் மூடப்பட்டு அம்மரத்தின் மேல்கிளைகள் மட்டும் இங்கொன்று அங்கொன்றாகக் காணப்படுகின்றன. இப்பேர்க்கொத்த பாகத்தில் ஓரிடத்தில் ஒருபாதை வெட்டி வழி ஏற்படுத்தியிருக்கிறார்கள். இது சுமார் 20- அடி ஆழத்திற்கு அதிகமாகவே வெட்டப் பட்டிருக்கிறது. இப்படி வெட்டியெடுக்கப்பட்ட மண்ணை பாதையின் இருபுறத்திலும் மலைபோல் குவித்திருக்கிறார்கள். இப்படி பாதை வெட்டி ஏற்படுத்தி யிருப்பதில் பல கட்டடங்களை கண்டதாகவும் சொல்லுகிறார்கள். தவிர பூமியானது அடிபாகத்தில் கடினமானதாகவு மிருக்கிறதாம்.

இப்பட்டணத்தில் குரங்குகள் அதிகம். ஒவ்வொன்றும் அதிககாத்திரமானதாயிருக்கிறது. இவைகள் அதிக தொந்திரவு செய்கிறதில்லை என்றாலும் ஒவ்வொருவரும் கையில் பெருத்த தடியை வைத்துக்கொண்டே வெளியில் செல்லுகிறார்கள். இவ்விடத்தில் ஓட்டுபில்லை வீடுகள் கிடையாது. எங்கு பார்த்தாலும் மாடமாளிகையும் கூடகோபுரங்களும், மெத்தைகளுமாகவே காணப்படுகின்றன. நாட்டுக்கோட்டை செட்டிமார்களுடைய சத்திரம் மெத்தைகட்டட மல்லவாயினும் விஸ்தாரமானது. இதிலும் நமது தென்தேச நாகரீக மாதிரியான பஞ்சலோகத்தினால் செய்யப்பட்ட இராம இலக்ஷ்மணர் முதலியவர்களுடைய விக்கிரகங்கள்செய்து வைக்கப்பட்டு தினப்படி பூஜை முதலியவைகள் செய்யப்பட்டு வருகிற ஒரு மண்டபமிருக்கிறது. இதில் பிராமணர்களுக்கு மட்டும் ஒருவேளை அன்னம் போடப்படுகிறது. யாத்திரைக் காரர்களுக்கு தங்குவதற்கு இடமும் கொடுக்கத் தகுந்த விதமான சில கட்டடங்கள் கட்டியிருக்கிறார்கள். ஆனால் அப்படி தங்குகிறவர்களிடத்தில் தினத்திற்கு இவ்வளவு என்பதாக வாடகை வசூல் செய்கிறார்கள்.

சரயு நதியில் ஜலம் சுமார் ஒரு மைல் அகலத்தில் எப்பொழுதும் ஓடிக்கொண்டே யிருக்கிறது. இதைக்கடந்து செல்ல ஒரு படகுப் பாலம் கட்டியிருக்கிறார்கள். தவிர படகுகளும் ஏராளமாய் உபயோகிக்கப்படுகின்றன. இந்நதி மகா உன்னதமான இமயமலையில் உற்பத்தியாகி அதிக வேகமாய் ஓடிவருகிறபடியால் எப்பொழுதும் ஜலம் அதிக குளிர்ச்சியாயிருக்கிறது. சில சமயங்களில் பனிக் கட்டிகள் ஜலத்தின்பேரில் மிதந்துக் கொண்டு போகுமாம். இதில் முதலைகள் அதிகம். ஸ்நானஞ் செய்யப்பட்ட துரையிலேயே சாதாரணமாய் சிறிய முதலைகளைப் பார்க்கலாம். இந்த தீர்த்த மகத்துவத்தைக் கருதியே தற்காலத்திலும் சில புண்ணியவான்களும் பைராகிகளும் தங்கள் தேகத்தோடு, பரம பதத்தைக் கொடுக்குமென்ற முழு நம்பிக்கையுடன் இந்த நதியில் இறங்கி விடுகிறார்களாம். இந்த நதியில் ஸ்நானஞ்செய்ய வருகிறவர்களுக்கு கணக்கே யில்லை. இவ்விடத்திலுள்ள புரோகிதர்களும் பண்டாரங்களும், மற்ற ஸ்தலங்களில் யாத்திரைக்காரர்களை வருத்திப் பிடுங்குவதுபோல

செய்யாமல் கொடுத்ததைப் பெற்றுக்கொண்டு திருப்தியடைகிறார்கள்.

பட்டணத்தில் ஒவ்வொரு மடத்திலும், ஆலயத்திலும், வீட்டிலும் கிணறுகள் வெட்டியிருக்கிறார்கள். கிணறுகள் அதிக ஆழமானவை. இவைகளுக்கு இரண்டடி உயரமுள்ள கைபிடிச் சுவர் கட்டி அதன்பேரில் குறுக்கும் நெடுக்குமாக சிலமரங்களைப் போட்டும், மேல் பாகத்தில் இரண்டுகஜசுற்றளவுள்ள ஒருபெரிய உருளையைப்போட்டும், அதன்பேரில் இரண்டு நுனியிலும் இரண்டு இரும்பு வள்ளத்தைக் கட்டிய கயிற்றைப்போட்டும் தண்ணீர் இறைக்கிறார்கள். தண்ணீர் இறைக்கிறவன் கைபிடிச் சுவரின்பேரில் போடப் பட்டிருக்கிற மரங்களின்மேல் நின்றுக்கொண்டு மேற்படி கயிற்றை இழுக்க ஒரு வள்ளம் தண்ணீருடன் மேலேவர மற்ற வள்ளம் தண்ணீரைநோக்கிக் கீழே செல்லுகிறது. ஆனால் தண்ணீர் இறைக்கிறவன் வெகு ஜாக்கிரதையாக மேற்படி மரங்களின் பேரில் நிற்கவேண்டும். சற்று தவறினால் கிணற்றில் விழுவானென்பதில் தடையில்லை. இவ்விடத்தில ஜனங்கள் இதில் வழக்கப்பட்டிருக்கிறபடியால் சிறிய பெண்களும் கூட வெகு லகுவாயும் அலக்ஷியமாயும் இதில் தண்ணீர் இறைக்கிறார்கள்.

கடைகளில் கத்தரி, உருளைக்கிழங்கு, சேப்பங்கிழங்கு, வெள்ளரி, மிளகாய் முதலியவைகள் ஏராளமாய் விற்கப்படுகின்றன. புளிய மரங்கள் அதிகமாக பலவிடங்களிலும் காணப்பட்டாலும் குரங்குகளினுடைய உபத்திரவத்தினால் பலனாகிய புளி கொஞ்சமும் சேர்க்கப்படுகிறதில்லை. இலந்தை, கொய்யா முதலிய பழங்கள் வேண்டிய அளவு கிடைக்கின்றன. பால், தயிர், வெண்ணெய், நெய் முதலியவைகளுக்குக் குறைவில்லை. ஜனங்கள் அநேகமாய் விஷ்ணுபக்தர்களாதலால் எவர் வாயிலும் 'ஜே! சிதாராம்' என்ற பாராயணமே பலமாயிருக்கின்றது. இதைக்குறைக்க எண்ணங்கொண்டே அவுரங்கசீப் காலத்தில் அநேக இந்து ஆலயங்களை இடித்து பதினொன்குவளைவுகள் வைத்து ஒரு பெரிய மஜீதைக் கட்டினார்கள். இதனால் மனிதர்களுக்குள்ள ராமபக்தியதிகப்பட்டதேயன்றிக் குறைவு படாததால் 1730-ம் வருஷத்தில் அயோத்திக்கு நான்கு மைல் தூரத்தில் பைசாபாத்து என்ற ஓர் பட்டணத்தைக்கட்டி அதில் பிர்மாண்டமான சில கோரிகளையும், மஜீதுகளையும், பல கோட்டைகளையும் கட்டினார்கள். இவ்விடத்தில் சவுக்கென்ற கடைத்தெருவு மிகவும் அழகானது. பித்தளைப் பாத்திரங்கள், பலவர்ணங்கள் தோய்த்த துணிகள், தட்டுமுட்டு சாமான்கள் ஏராளமாய் விற்கப்படுகின்றன. உக்கா குடுக்கைகள் செய்து விற்கப்படுகிற கடைகள் மட்டும் 500-க்கு அதிகமாகவே காணப்படுகின்றன. பலவித தானியதவசக் கடைகள் ஆயிரக்கணக்காயிருக்கின்றன. சாயந்திரவேளையில் இந்த சவுக்கண்டை போய்ப்பார்த்தால் ஜனங்கள் நடப்பதற்கு வழியின்றி தடுமாறுவதைக் காணலாம். தவிர இவ்விடத்தில் அவுரங்கசீப்பினால், ஆக்ராவிலுள்ள டாஜ்மஹாலுக்கு சமமானதாகக் கட்டப்பட்ட கோரி விசேஷமான கட்டடம் சுமார் ஒருமைல் சுற்றளவுள்ள மைதானத்தில் கோட்டை போன்ற மதிள்சுவர்களுடனும் இரண்டடுக்கு மெத்தை வைத்துக்கட்டப்பட்ட கட்டடமான வாயிலையுடையதாயும் சுற்றியும் சிங்காரமான தோட்டத்தை யுடையதாயும், மத்தியில் பிரமாண்டமான மூன்றுஅடுக்கு மெத்தையும் ஸ்தூபிகளையு முடையதாய் உட்பக்கத்தில் விசாலமான அறைகளை யமையப்பெற்றதாயும் 150 கஜநீளமும் அதற்குத்தக்க அகலமும் வைத்துக் கட்டப்பட்டது. இதன்மத்திய அறையில் சூரஜடௌலாவின் மனைவி தாய் ஜீபீகம் என்றவளுடைய கல்லறையிருக்கிறது.

இந்த கட்டடத்தை அதிகசீராய் வைத்திருக்கிறார்கள். இந்த பைசாபாத்தை யடுத்துச் செல்லும் சரயுநதி இரண்டுமைல் அகலமுள்ளதாயிருக்கிறது. ஸ்ரீராமர் தமது தம்பிமார்களுடன் சரயுநதியில் இறங்கியவிடம் இவ்விடத்தில் தானிருக்கிறது. இதற்குக் கேதாரகட்டம் என்றுபெயர். இதைத் தவிர வேறு சில கட்டடங்களுமிருக்கின்றன. இவைகளுக்கு பலமான படித்துறைகளும் அவைகளுக்கு மேல் புறத்தில் அநேக மண்டபங்களும் மாளிகைகளும் அழகாகக் காணப்படுகின்றன. இவ்விடத்திலிருந்து இமயமலை சார்புகளையும் அதில் பெருகிவரும் நதிகளின் அழகையும் பார்க்க வெகு ஆநந்தமாய்த் தோற்றும்.

அயோத்தியிலிருந்து பரதர்தங்கி யரசாண்டு வந்ததாகச் சொல்லப்படுகிற நந்திக்கிராமம் 14 மைல்தூரத்திலிருக்கிறது. இவ்விடத்தில் பரதருடைய ஆலயமிருக்கிறது. இந்த ஸ்தலத்திற்கு ரயில் மார்க்கமாகவும் போகலாம். இதற்கு பரதகுண்டா ஸ்டேஷன் என்று பெயர். அயோத்திக்கு மூன்று மைல்தூரத்தில் சூரியகுண்டம் என்பதாக ஒரு தீர்த்தமிருக்கிறது. இதில் 21-நாள் தினப்படி சூரியோதய காலத்தில் ஸ்நானஞ்செய்தால் வெள்ளைக்குஷ்டம், அடஸ்மாரம் முதலிய வியாதிகள் நீங்கிவிடுவதாகச் சொல்லுகிறார்கள். அயோத்தியில் ஸ்ரீராம நவமி உற்சவம் அதிக அற்புதமாகக் கொண்டாடப்படுகிறது. இலக்ஷக் கணக்கான ஜனங்கள் கூடுகிறார்கள்.

## NOTICE TO SUBSCRIBERS.

Subscriptions to the "Vivekachintamani" in arrears outstanding after October 1916, will be liable to be collected by V.P.P. Intimation of the same has been given to officers and heads of institutions by certified post. Subscriptions cannot be discontinued in the middle of a volume.

*Lalitalaya,*
25th October 1916.

LALITA PUBLISHING Co.,
*Managing Agents.*

## "SPEAK GENTLY."*
## இனியசொற் கூறல்.

கலிவிருத்தம்.

1. இன்புரை யியம்புக யாவர் மாட்டினும் ;
வன்பினச் சுறுத்தயே வலிதி னுள்தலின்
அன்பினு லாளுத லரிது ! வெஞ்சொலால்
என்புரி நலனெலா மிழத்த லீண்டரோ?

2. உள்ளுறுஞ் செயிரறு முலப்பி லன்பினல்
கள்ளமின் மொழிபகர் காத லாளர்தாம்
எள்ளலி லெழுமையும் பிரிகி லேமென
விள்ளலுங் குறித்திடின் மெல்ல வல்லவோ?

3. ஒண்பயத் [1]தோடுதேன் கலந்த தொப்பென,
நண்புறுந் தூயவர் நவிலு நல்லுரை
தெண்புனன் மெல்லெனச் செல்லல் போலுமே;
பண்புறு மன்பினோர் [2]பணியு மன்னதே.

4. இளஞ்சிறார் தங்களோ டிசைக்க வின்னுரை,
உளஞ்சிறந் தவருமை யுசக்கு மாறுநீர்;
தெளிஞ்சிடத் தெரித்தலு மினிது செய்கவே;
விளிஞ்சவர் போதலா றறிவர் மேலரோ?

5. மூப்பினல் வருந்துவோர் [3]முசிந்து வாடநீர்
தீப்படு கொடுமொழி செப்ப லீரவர்
கீழ்ப்படு நெடுந்துயர் [4]கிளத்தி னெண்ணில,
மேற்படு வாழ்க்கையு மிகவிங் கில்லையே.

6. ஏழைகண் மாட்டினு மிசைக்க வின்னுரை,
தாழ்வும்வெந் தளர்வுமன் னவர்க்குச் சார்ந்தன ;
சூழுகின் மிகவுள ; துயர்செய் சொல்லினல்
மாழ்கியுள் ளயர்ந்தவர் வருந்தல் வேண்டுமோ?

7. அறநெறி திறம்பினோ ரவர்க்கு மின்னுரை
முறைமையின் மொழிகுக முயன்றும் வீணதா
பிறர்புரி துயரினற் பிழைத்த தாகுமால் [யப்
மறுவற வவரைநீர் மாண்பின் மீட்கவே.

8. மெல்லவுள் ளன்பொடும் விளம்பு மின்னுரை
வெல்லுநெஞ் சிடையினில் விதைத்த வோர்
மல்லலி னதுதரு மகிழ்வு மின்பமும் [விதை
சொல்லுமே யுலப்பிலாத் தொகையி [5]னூழியே.

* Bates.

1 பயன்-பால். 2 பணி-சொல். 3 முசிந்து-மெலிந்து. 4 கிளத்தின்-சொல்லுங்கால், 5 ஊழி-யுகம்.

SHORT STORY.

## "SIVASAMBAN."

## சிவசாம்பன்.

இஃது ஓர் செழிப்பான கிராமம். இதை யடுத்து காவேரிநதியின் ஓர் கிளை பாய்கிறபடியால் நஞ்சை பூமிகளும், தென்னை, கமுகு முதலிய தோப்புகளும் கண்களுக் கெட்டிய தூரம் பரந்து, நீர்வளம் நிலவளம் பொருந்தி, குடிகள் பொருளாதார முள்ளவர்களாயும், கஷ்டமென் பதையேயறியாதவர்களாயும், திடகாத்திர தேகமுடையவர்களாயும் குதூஹலமுள்ளவர்களாயு மிருந்தார்கள். இதில் பற்பல ஜாதியார்களிருந்ததன்றி, பிள்ளைகளுக்கு வேண்டிய அளவு கல்வியைக்கற்பித்துசர்க்கார் உத்தியோகத்தையே தமது குலத்தொழிலாக்கிக் கொள்ளக் கருதி கடன் பட்டாவது, யாசகஞ்செய்தாவது தமது பிள்ளைகளைக் கற்பிக்கவேண்டுமென்ற பேரவாக்கொள்ளும் பார்ப்பினருமில்லாமற் போகவில்லை.

யதேஷ்டமான ஸ்திதிகளை யுடையவர்களும் தம்மக்களை கல்வி பயிலவிட்டு, ஐகோர்ட் வக்கிலாகவும், டிப்டி கலெக்டராகவும், சப்ஜட்ஜியாகவும் பார்க்க அவாக்கொண்டவர்களாய் செலவிடுவதைக்கண்ட மத்தியதர ஸ்திதிகளையுடையவர்களும், ஏழைகளும் அதே நோக்கமுள்ளவர்களாய் தம்குமாரர்களையும் உத்தியோகத்தின் பொருட்டாகவே கல்வி கற்பிக்கத் தொடங்கினர்கள். பலர்தமது பூமிகளையும் வீடுகளையும் ஒவ்வொன்ருக விற்று தமது செல்வச் சிறுவர்களை தென்னிந்தியா கேம்பிரிட்ஜ் என்ற பட்டணத்திற்கு அனுப்பி கல்விச்சாலையில்படிப்பித்துவந்தார்கள். இதிலும் போட்டாபோட்டி யதிகரித்துவிட ஒருவர் என்குமாரனை பி. ஏ. வரையில் ஒருகைபார்த்துத்தான்விடுவேனென்பார்கள். மற்ருெருவர் ஆஸ்திபோனுலுஞ் சரி, பாஸ்திபோனுலுஞ் சரி, என் மகனை பி. எல். வரையில்படிப்பிக்காமல் விடேனென்பார். வேருெருவர் தன் மைந்தனைப் பெரிய இஞ்சினீர் வேலை கிடைக்கத் தகுந்த பி. சி. இ. பரீக்ஷை வரையில் படிப்பித்தே தீருவேனென்பார்.

இவர்களில் மத்தியதர வகுப்பைச் சேர்ந்தவரும், நமது கதாநாயகர் சிவசாம்பனுடைய தந்தையுமாகிய லோகநாதய்யர் தனது ஒரே செல்வப் புத்திரனுன சிவசாம்பனை, ஹைஸ்கூல் பரீக்ஷையில் தேற்றுதற்குவேண்டி தமது வீட்டின்பேரில் 500 ரூ. கடன் வாங்கினுர். அவனும் அப்பரீக்ஷையில் முதல்வகுப்பில் தேறவே எப். ஏ. க்குப் படிப்பதாயிருந்தால் பாடசாலையில் சம்பளமின்றி சேர்த்துக் கொள்வதாக தலைமை உபாத்தியாயர் சம்மதித்தனர். லோகநாதய்யருக்ந ஆசை யதிகரித்தது. பையனை எப். ஏ-க்கும் படிப்பித்தனர். இதற்கு தொகையதிகமாக வேண்டியிருந்ததால், கையில் பணமின்றி தமது நஞ்சை பூமியை விற்று இந்திய கேம்பிரிட்ஜிலிருக்கும் தமது குமாரனுக்கு வேண்டிய வரையில் அப்போதைக்கப்போது பணம் அனுப்பிக்கொண்டு வந்தார். எப். ஏ. பரீக்ஷைக்கு பணம் கட்டும் காலம் நெருங்கிற்று. சிவசாம்பன் ஓட்டலுக்குக் கொடுக்கவேண்டிய தொகைக்கும் பரீக்ஷைக் கட்டணத்திற்கும் 50 ரூபாய் அனுப்பும்படி இரண்டு கடிதம் எழுதியும் லோகநாதய்யர் பதில் எழுதவில்லை. ஹைஸ்கூல் பரீக்ஷைக்கு வீடும், எப். ஏ. க்கு பூமியும் தீர்ந்தது. கடன்வாங்க எண்ணங்கொண்டு பலரிடம் சென்றனர். "தங்கள் குமாரனுக்கு ஸ்கூல் சம்பளம்கூட இல்லையாமே. இந்த வருஷத்தில் எப். ஏ. பரீக்ஷையும் முதல் வகுப்பில் தேறுவான். பி. ஏ. க்குப் படிக்க உபகார சம்பளமும் கிடைக்கும். ஒரு வேலைக்குச் சேர்ந்தாலும் 60-80. ரூ. வாங்குவான், இனி உங்கள் கஷ்டம் தீர்ந்தது" எனறு சிலர்கூறினுர்கள். ஒரு பைசாக்கூடக் கிடைக்காதபடியால் குமாரனுக்கு பதில்கூட எழுதவில்லை.

சிவசாம்பன்—"இன்று சனி, நாளை ஞாயிறு, பன்னிரண்டு மைல் தூரத்தைப் பார்த்தால் திங்கட்கிழமை பணம் கட்டமுடியாது. கிராமத்திற்கு சென்று தாய் தகப்பனைக் கண்டு தொகை பெற்று வருவோம்," என்பதாக சனிகிழமை அதிகாலையில் தனது இஷ்டர்களிடம் சொல்லிக்கொண்டு புறப்பட்டான்.

குடிமங்கலத்தில் லோகநாதய்யர் தனது மனைவியைப் பார்த்து:—

"என்னடி! சிவசாம்பனிட மிருந்து இரண்டு கடிதம் வந்துவிட்டது. திங்கட்கிழமை பரீக்ஷைக்குப்பணங்கட்டுகிற தினமாம். மெட்ரிகுலேஷனுக்கு வீடு போயிற்று, எப். ஏ. முடிவதற்கு முந்தியே பூமியும் தொலைந்தது. யாரைக் கேட்டாலும் நமது பையன் பேரில் பொரு

மைகொண்டு கடன்கூடக் கொடுக்கமாட்டே னென்கிறார்கள். இந்தப் பரீக்ஷையில் எப்படி யாவது தேறிவிட்டானானால் ரூ. 50, 60-க்குக் குறையாமல் எங்கேயாவது வேலைக்கு அமர்த்தி விடலாம். உன்னிடம் ஏதாவதுண்டானால் கொடுக்கிறாயா? இல்லாவிட்டால் பையன் படிப்பை நிறுத்தி விடவேண்டியது தான்."

மனைவி:—" என்னிடம் இன்னும் என்ன இருக்கிறது. முந்தியே என் தாயார் வீட்டில் போட்ட கம்மலைக் கொடுத்தேன். பிந்தி கழுத்தில் கட்டிக்கொண்டிருந்த சாட்டட்டிகையும் பிடுங்கிக்கொண்டு போய்விட்டீர்கள். ஒவ்வொருவரைப் போல வீட்டுப் பண்டங்களை விற்றுசிறுபாடுசேர்த்து நான்கையில் வைத்துக் கொண்டா இருக்கின்றேன். சில்லரை நகை களையும் ஒவ்வொன்றாக விற்று படிப்பு, படிப்பு என்பதாக கொடுத்துவிட்டீர்கள். உங்களை யறியாமல் என்னிடத்தில் ஒரு பைசாகூட கிடையாதே! அவன் சம்பாதித்துப் போட்டு நாம் சாப்பிடப்போகிறது தெரியாதா! என்னவோ கடன்! நடேசன் பிள்ளைபோல் இவனும் எப்பொழுது கிறிஸ்து வேதத்தில் சேருகிறானோ! நீங்கள் படித்துத்தானா இந்த வீடு பூமி முதலியவைகளை யெல்லாம் சம்பாதித்தீர்கள் நீங்கள் செய்து வந்ததுபோல அவனும் சொந்தப் பண்ணையஞ் செய்துக்கொண்டு வந்தால் போதாதா? அப்படித்தான் ஏராளமாய் சம்பாதித்து யாருக்குவைக்கவேணும்? நமக்குள்ளவனோ ஒருத்தன். அவனைத்தனியாக வேறு இடத்தில் விட்டு விட்டு, நாம் இங்கே யிருக்கிறதில் என்ன சுகம். குழந்தைக்கு தலை, கால் வலித்தது, யார் அவனுக்குதவி? உடனே கடிதமெழுதிப் புறப்பட்டு வரச்சொல்லுங்கள்."

இவர்கள் இவ்விதம் பேசிக்கொண்டிருக்கும் பொழுதே சிவசாம்பன் உள்ளே பிரவேசித்து தாய் தகப்பன் கால்களில் விழுந்து நமஸ்கரித்தான்.

சிவசாம்பன்:—" ஏனப்பா! கடிதம்கூட எழுதவில்லை."

லோகநாதய்யர்:—"கையில் காசில்லை. அதினாலேதான் விழிக்கிறேன்."

சிவசாம்பன்:—" இந்த சமயத்தில் காசில்லையென்றால் என்ன செய்கிறது? இந்த வருஷம் எப்படியும் பரீக்ஷையில் தேறிவிடுவேன். எப். ஏ. தேறிவிட்டால் எங்கேயாவது ஒரு வேலைக்கு பிரயத்தனஞ்செய்து அமர்ந்து விடுகின்றேன். பிந்தி உங்களுக்கு இந்தக் கஷ்டம் வேண்டாம்."

தாயார்:—"சிவசாம்பா! நீ முந்தி ஸ்நானஞ் செய்து சாப்பிடவா. எங்கேயாவது உங்கப்பா போய் கடன் வாங்கிக்கொண்டுவந்து கொடுக்கட்டும்."

சிவசாம்பனும் ஸ்நானஞ்செய்யப்போனான். லோகநாதய்யர் மறுபடியும் யாரையாவது கடன் கேட்கலாமென்று வெளியே போனார்.

சற்று நேரத்திற்கெல்லாம் தந்தை வீட்டுக்குத் திரும்பிவந்து "சிவசாம்பா! கேட்காத விடமெல்லாம் கேட்டேன், முட்டாத விடமெல்லாம் முட்டினேன் என்னசெய்கிறது.!"

"அகப்பட்டுதோ? இல்லையோ ?"

"இந்த வருஷம் கிடக்கட்டும், வருகிற வருஷம் பார்த்துக் கொள்வோம்." "இந்த வருஷம்கிடக்கட்டுமா? இந்தவருஷம் நான் கஷ்டப்பட்டுப் படித்ததுபோல் இதுவரையில் எந்த வருஷமும் படிக்கவில்லை. பரீக்ஷைக்கு அனுப்புவதற்காக பாடசாலையில் செய்யப்பட்ட பரீக்ஷையில் நான் தான் முதலாகத் தேறினேன். அப்படியிருக்க இந்த வருஷம் வேண்டாமென்றால் என்மனம் கொதிக்கின்றதே. பணமில்லாததால் இன்ன பையன் பரீக்ஷைக்கு வரவில்லை. என்று கூடப்படிப்பவர்கள் என்னை கேலிசெய்வதைக்கேட்டுக் கொண்டிருப்பதை விட பிராணனையே விட்டுவிடலாமே.

"பிராணம் க்ஷணபங்குரம்,
மானமோ ஆசந்திர தாரசமானது"

என்று சொல்லிவிட்டு யோஜிக்கலானான்.

"அவரன்றி அணுவுமசையா. ஆ! இச்சமயத்தில் எனக்கு பணமில்லாமற் செய்தவர் கடவுளே. அவர் என்னை ஏன் இவ்வளவு தூரம் படிக்கும்படிசெய்து கடைசியில் கைவிட நினைத்தார்? அதற்கும் காரணமிருந்தேயிருக்கும். அவரை அநாதைரக்ஷகரென்கிறார்களே? எப்படி? இப்பொழுது என்னை அநாதையாக்கியவர் அவராகவிருக்க, அவரை அநாதை ரக்ஷகரென்று கூறுவது எங்ஙனம்! ஆனால் "நான் அநாதையாக விருக்கின்றேன், என்னை ரக்ஷி" என்பதாக நான் அவரை நேரில்கண்டு கேட்டு அவர் என்னை ரக்ஷிக்காவிட்டாலன்றோ நான்

அவரை ரக்ஷகரல்லவென்று கூறலாம். சரி, நான் வரும்வழியில் ஒரு பெரிய காடும் அதன் நடுவில் ஒரு ஆலமரம் மிருக்கதன்றோ ?. அங்கேசென்று, 'இனிது இனிது ஏகாந்த மினிது' என்றபடி தனியாகவிருந்து பகவானைக் கண்டு நமது சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்வோம்" என்று யோஜனையை முடிவுசெய்துக் கொண்டு:—

"அம்மா! அப்பா! நான் தென்னிந்தியா கேம்பேரிட்ஜ்க்குப்போய் என் கூடப்படிக்கும் பிள்ளைகளில் சிலரை எனக்கு உதவி செய்யும் படியாகக்கேட்டு பணத்தைக்கட்டி பரீக்ஷைக்குப் போகின்றேன். பிறகு ஈசன் செயல்!" என்று கூறிவிட்டு புறப்பட்டான்.

தாய்:—"சிவசாம்பா நீ போகவேண்டாம். உன் கூடப் படிக்கப்பட்டவர்களெல்லாம் பரீக்ஷைக்குப்பணம் கட்டவும், நீ யவர்களைக் கேட்டு அகப்படாமற் போசம்பக்ஷத்தில், உனக்கு அவமானமாகவிருக்கும். நீயோ அவமானத்தைச் சற்றும் சகிக்கமாட்டாய். பிறரை நம்பிப்போவது சரியானதன்று; போகவேண்டாம் நின்று விடு."

சிவசாம்பன்:—"அம்மா! இல்லை, எனக்கு கடவுள் கிருபைசெய்வார். அவருடைய பரிபூர்ணமான கிருபை எனக்குண்டாகும்படி நீ ஆசீர்வாதம்பண்ணு. தடைசெய்யாதே."

தாய்:—"நல்லது, அப்பனே! உனக்கு பகவான் கிருபை செய்வார், போய்வா."

சிவசாம்பன் மூன்றுமைல் தூரம் சென்று குறித்த வனத்தையடைந்து, பிரமாண்டமான ஆலவிருக்ஷத் தினடியிலமர்ந்து பகவானை நேரில் காண்பதற்கு இதுவே தகுந்த விடமென்றெண்ணி அவரையே சிந்தித்துக்கொண்டிருந்தனன். குளிர்ந்த காற்றுவீசிற்று. பூர்ண சந்திரன் உதயமாயினன். மனுஷ்ய அரவமென்பதேயின்றி உம் என்ற மெல்லிய காற்றின் ஓசையை ஸ்ருதியாகக்கொண்டு பக்ஷி ஜாதிகள் பாடவும், இவனுக்கு குதூஹலம் மதிகரித்து, மெய்மறந்து ஆநந்த பரவசனாகி, "அரனே! திரிபுரனே! சங்கரனே! கங்காதரனே! பராபரனே!" என்று வாய்விட்டுக் கூவினன். தன் முன்னால் ஏதோவொன்று கிர் என்ற சப்தத்துடன் வருவதாகத்தோற்றி கண்களைத்திறந்து பார்த்தான். காற்றினால் அடித்துக்கொண்டு வரப்பட்ட ஒருகாகிதத்துண்டு அவன் காலண்டை கிடந்தது. அதையெடுத்து விரித்து சந்திரிகையின் வெளிச்சத்தினால் படித்தான்.

"தேடரிய சத்தாகி யென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே,
தேசோமயாநந்தமே."

என்று தாயுமானவர் பாடலின் ஓரடியை எழுதிய கடிதம். "இந்த அடிகளை கொண்டு முடியும் பாடல் கவனத்திற்கு வரவில்லை."

தன் இனிமையான குரலால்.—

"இனியே தெமக்குனருள் வருமோ வெனக்கருதி
எங்குதே நெஞ்சமையோ,
இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென்
றெண்ணவோ திடமில்லையே,
அனியாயமாயிந்த வுடலை யானென்று வரும்
அந்தகற்காளாகவோ,
ஆடித்திரிந்து நான் கற்றதுங் கேட்டதும்
அவலமாய்ப் போனதன்றே,
கனியேனும் வறிய செங்காயேனு முதிர் சருகு
சந்த மூலங்களேனுங்,
கனல்வாதை வந்திடினள்ளிப் புசித்து நான்
கண்மூடி மௌனியாகி,
தனியேயிருப்பதற் கெண்ணினேனெண்ணமிது
சாமி நீ யறியாததோ,
சர்வ பரிபூரண வகண்டதத்துவமான
சச்சிதாநந்த சிவமே."

"இந்தப் பாடலல்ல"

2 "தந்தை தாய் தமர்தாரமகவென்னு மிவையெலாஞ்
சந்தையிற் கூட்டமிதிலோ
சந்தேகமில்லை மணிமாட மாளிகை மேடை
சதுரங்க சேனையுடனே
வந்ததோர் வாழ்வு மோரிந்திரசால கோலம்!
வஞ்சனை பொருமை லோபம்
மைத்தமன மாங்கிருமி சேர்ந்த மல பாண்டமோ
வஞ்சனை யிலாத சனவே!
எந்த நாளுஞ்சரி யெனத்தேர்ந்து தேர்ந்துமே
இரவு பகலில்லாவிடத்
தேசமாய் நின்ற நின்னருள் வெள்ளமீதிலே
யானென் பதறவுமுழுகிச்
சிந்தைதான் றெளியாது சுழலும் வகையென்
தேடரிய சத்தாகியென் [கொலோ
சித்தமிசைகுடி கொண்டவறிவான தெய்வமே
தேசோமயாநந்தமே."

என்று மனதுருகிப் பாடினன். கா, கு வென்று கத்திக் கொண்டிருந்த பக்ஷிகளும் இவனது இனிய குரலைக்கேட்டு மௌனமாய் செவிசாய்த்தன.

"என்னுடைய சித்தத்தில் குடிகொண்டிருக் கப்பட்ட தேசோமயாநந்தமாகிய தெய்வத்தை யானறியவில்லை யல்லவா" என்று இரவு பன்னி ரண்டு மணிவரையில் தன்னுடைய பஞ்ச பூதங் களையும் ஒரே நிலையில் நிறுத்தி அசைவற்றிருந் தனன். உடனே அவனது மனக்கண்ணிற்கு ஒரு திவ்விய ஜோதி தோன்றிற்று. அதையா னந்தமாய் தரிசித்துக்கொண்டு வெகுநேர மிருந்தனன். பிறகு அவனது உடல்சிலிர்த்து, பலதடவை நடுங்கி, கொட்டாவி விட்டு மரத்தின் வேர்களின்பேரில் சாய்ந்து,—

" ஆகாசலிங்கத்தைக் கண்டேன்டியங்கே
யாருமறியாமல் நின்றேன்டி
ஏகாந்தமாக விருந்தேன்டி மன
தேக்கர் துலைந்தது பாருங்கடி."

" சித்தஞ்சிதம்பரமாச்சுதடி, முன்
செய்த வினையெல்லாம் போச்சுதடி
சுத்தப்பிர்ம மயமாச்சுதடியதைச்
சொல்லத் தெரியுமோ பாருங்கடி."

என்ற கும்மியை வாயில் பாடிக்கொண்டு எழுந்து குதித்தான். கண்களில் தாரை தாரை யாக நீரைப் பெருக்கினான்.

சூரியன் உதித்தது. உலகப்பற்றுகளை அடி யோடுகளைந்த சந்நியாசியாகி, தான் உடுத்திக் கொண்டிருந்த வஸ்திரங்களை வழியில் சந்தித்த வர்களுக்குக் கொடுத்து கோவணாண்டியாய் மானாபிமானத்தைவிட்டு, கண்டவர் கொடுத்த வைகளைத்தின்று, கிடைக்காத தினங்களி லுண்டாகும் பசிவேதனையின்றி, பற்பல ஊர் களைக் கடந்து சிற்சில க்ஷேத்திரங்களில் தங்கி கொங்கேழு சிவஸ்தலங்களில் ஒன்றாகிய தா டிக்கொம்பு என்ற திவ்வியஸ்தலத்தை யடை ந்து சிவகைங்கரியங்களைச் செய்துகொண் டிருந்தனன். இவருடைய வைராக்கியத்தைக் கண்ட பலர் இவருக்கு அன்னபானாதிகளை யுதவிக்கொண்டு வந்தனர். சில சமயங் களில் 8-10 நாள்வரையில் ஆகாரமின்றியே இருந்தனராம். வருஷம் நான்கு சென்றது.

லோகநாதய்யர் தன் குமாரன் சங்கதி யா தொன்றும் தெரியாதபடியால் தென்னிந்தியா கேம்பிரிட்ஜிக்குச்சென்று விசாரித்து, துப்பு அகப்படாமல் பல ஊர்களை வீணாகச்சுற்றித் திரிந்து குடிமங்கலம் சேர்ந்து புத்திர சோக மடைந்து காலங்கழித்தார்.

தாடிக்கொம்பில் ஒருநாள், சிவாலயத்திற்கு ஒரு உத்தியோகஸ்தர் வந்தார், அவரோடு அவர் மனைவியும் குழந்தைகளும் வந்தார்கள். உத்தியோகஸ்தர் மனைவி நமது சிவசாம்ப ஸ்வாமிகளை சற்று உற்று நோக்கினாள். உத்தி யோகஸ்தர் தம்மனைவியை நோக்கி யவனை என் அவ்வளவு குறிப்பாய் பார்க்கிறாய் என்றனர்.

அவரைப் பார்க்கும்பொழுது முந்தி பார்த்த முகம்போலிருந்தது. எங்கள் ஊரில் லோகநா தய்யர் என்று ஒருவருண்டு அவரை யுங்க ளுக்குத் தெரிந்திருக்குமே! அவர் குமாரன் சிவசாம்பன் என்ற பையன் சிலவருஷங் களுக்கு முந்தி எங்கேயோ போய்விட்டான். எப். ஏ-க்குப் பணங்கட்ட தகப்பனார் தரித் திரத்தினால் பின்வாங்கினவராய் மறுவருஷம் பரீக்ஷைக்குப் போகலாமென்று சொன்னார். அன்றுபோனவன் இதுவரையில் கிடைக்க வில்லை. இந்த மனுஷனைப் பார்த்தால் அந்த லோகநாதய்யருடைய குமாரன்போல் தோற் றுகின்றது என்றனள்.

"மெடிரிகுலேஷன் பாஸ்செய்து எப். ஏ. வரையில் படித்தவனா இப்படி இருப்பான்? உனக்கு தாய் வீட்டு ஞாபகம்போல் தோற்று கிறது."

"இல்லவே இல்லை. அவன் சிவசாம்பனே, நீங்கள் தான் அவனை விசாரியுங்களேன்."

"நல்லது விசாரிக்கலாம். முந்தி சுவாமி தரி சனஞ்செய்துக்கொண்டு வருவோம்."

உத்தியோகஸ்தரும் அவர் மனைவியும் பேசி யவைகளை கவனித்த சிவசாம்பஸ்வாமிகள் உடனே தான் உட்கார்ந்திருந்த இடத்தை விட்டு நீங்கி வேறு ஒரு மறைவான இடம் போய் உட்கார்ந்துக்கொண்டிருந்தார்.

அவர்களும் ஸ்வாமிதரிசனஞ்செய்து விட்டு அவரைவந்து பார்க்கக் காணாதவர்களாய் ஆல யத்தை பிரதக்ஷணஞ்செய்யச் சென்றார்கள். வடகோடி மூலையிலுள்ள ஓர் மரத்தடியில் இவரைக்கண்டு,

உத்தியோகஸ்தர்:—நீர் எவ்வளவு வருஷ மாய் இவ்விடத்திலிருக்கிறீர்?

ஸ்வாமி:—இக்கூண்டில் பிரவேசித்து சுமார் 25-வருஷமாயிற்று.

உத்தி:—நான் கேட்பது அதுவல்ல, இந்த ஊருக்கு வந்து எவ்வளவு காலமிருக்கும்?

ஸ்வாமி:—ஐந்து வருஷத்திற்கு அதிகமாகவேயிருக்கும். பிராரத்தம் இன்னும் விடவில்லை.

உத்தி:—உமக்கு தேகத்தின் பேரில் அவ்வளவு வெறுப்பு வருவானேன். உம்மை இன்னுரென்று அறிய விரும்புகின்றேன். தகப்பன் பேரையும் ஊரையும் கூறினல் போதுமானது.

ஸ்வாமி:—இதற்கு ஊரேது, பேரேது. பெற்று வளர்த்து வாலிபஞ்செய்த தகப்பனுக்கும் தாய்க்கும் கணக்கில்லை. பலதடவை இராஜ குமாரனுகவுமிருந்தேன். சிலதடவை கிராமதலையாரி மகனுகவுமிருந்தேன். நாற்காற் பிராணியாகவும் பிறந்ததுண்டு. உத்பிஜமாக ஜன்மமெடுக்காமலு மிருக்கவில்லை. மரஞ்செடிகளாகவுமிருந்தேன். அப்பொழுதெல்லாம் தாயும் தகப்பனுமுண்டு. உத்தமமென்று கூறும் இம்மானிட ஜன்மத்தில் தான் ஆசை, பாசம், மானம், அபிமானம், பொருமை, மோசம், பொய், அகங்காரம் முதலிய ஞான சூன்யஞ்செய்கிற குணங்கள் அதிகமாகப் பற்றிக்கொண்டு வருத்துகிறதென்பதையறிந்தேன். மற்ற ஜன்மங்களில் இவைகளினுடைய பாதையவ்வளவாகவில்லை. இதையறியவே, மாயைதொலைந்து தேடரிய சத்தாகியென் சித்தமிசை குடிகொண்ட அறிவேயான தேசோமயாநந்தமான தெய்வமாகிய தகப்பனுக்குற்ற பிள்ளையானேன். அவரை இப்பொழுது எங்கும் பார்க்கின்றேன். மறுபடியும் நீர் கேட்பதற்குண்டோ?

உத்தி:—நீர் பூர்ணவேதாந்தி என்பதையறிந்துக்கொண்டேன். ஆயினும் குடிமங்கலம் லோகநாதய்யர் குமாரன் சிவசாம்பய்யர் என்று நினைத்து உம்மிடம் இவ்வளவு தூரம் பேசத்துணிந்தேன். இன்னும் என் சந்தேகம் தீரவில்லை. நீர் ஒப்புக்கொண்டால் போய்விடுகிறேன். என்னிடம் கோபம் கொள்ளவேண்டாம் தயவுசெய்து கூறவேண்டும்.

ஸ்வாமி:—நீர் கூறியதில் உண்மை யில்லாமற் போகவில்லை. எனது அன்பே சிவசாம்ப ஸ்வரூபம். தந்தையாகிய லோகநாதனிருப்பது மங்களமானவிட மென்பதற்கு சந்தேகமுண்டோ ? ஆயினும் ஒன்று கூறத்துணிந்தேன். நீர் எந்த லோகநாதய்யருடைய குமாரனைப்பற்றி அதிக அன்பாயும் ஆவலாயும் விசாரிக்கிறீரோ அவன் தாய் பரலோகம் சென்ற சங்கதி யுமக்குத் தெரியாதாயினும், ஆதிசங்கரரும் அன்போடு செய்த காரியமாகிய தாய்க்கடனை, அவனுஞ்செய்து தீர்த்து நேற்றுத்தான் இவ்விடம் வந்தான்.

உத்தி:—ஆ! ஆ!! அப்படியா! நீர் கூறுவது உண்மைதானு? உமக்கு சங்கதி எப்படி தெரிந்தது.

ஸ்வாமிகள் மௌனமாயிருந்ததன்றி கண்களையும் மூடிக்கொண்டார்.

உத்தியோகஸ்தர் தான் வந்த காரியத்தை முடித்துக்கொண்டு மனைவிக்குத் தாய்வீடாகிய குடிமங்கலத்திற்கு வந்தார். லோகநாதய்யர் மனைவி இறந்துபோனது வாஸ்தவமென்று தெரியவந்தது. மற்ற சங்கதிகளையும் விசாரிக்கும்பொழுது, அவள் இறந்த தினத்தில் ஒரு பரதேசி, வீட்டு வாயிலில் வந்து காத்துக்கொண்டே யிருந்ததாகவும், சுடுகாட்டுக்கும் அப்பரதேசி பிரேதத்தைத் தொடர்ந்து வந்ததாகவும், பிரேதத்தின்பேரில் லோகநாதய்யர் நெருப்பை வைக்கப்போகும்பொழுது, அதைப்பிடுங்கி தன்கையால் பிரேதத்தின் பேரில் போட்டுவிட்டு ஓடிவிட்டதாகவும், அவனைப்பின் தொடர்ந்து ஓடிய சிலர் அவன் மறைந்து சென்றதைக்கண்டு திரும்பி வந்ததாகவும் தெரியவந்தது. உத்தியோகஸ்தர் தான் தாடிக்கொம்பில் கண்ட மனிதனைப் பற்றி லோகநாதய்யரிடம் கூறினர்.

லோகநாதய்யருக்கு, அன்று நெருப்பைத் தன்கையிலிருந்து பிடுங்கி சவத்தின் பேரில் போட்டுவிட்டு ஓடிய பரதேசி தனது குமாரன் சிவசாம்பன் என்பதாக உறுதிப்பட்ட படியால், அவனை எப்படியாவது பார்க்கவேண்டுமென்ற எண்ண முள்ளவராய் தன்னிடமிருந்த சொத்துக்களை விற்று பொன் நாணயமாக்கி, இடையில் கட்டிக்கொண்டு குடிமங்கலத்தைத்துறந்து, தாடிக்கொம்பு என்ற க்ஷேத்திரத்தை யடைந்து ஒரு வருஷகாலமிருந்தும், குமாரனைக்காணுதவராய் சந்நியாசி வேஷம் பூண்டு தன்குமாரனைக் கண்டு பிடிக்க வேண்டுமென்ற வாஞ்சையினல், பல க்ஷேத்திரங்களை சுற்றிப்பார்த்துக்கொண்டு ஸ்ரீ காசிமாநகர்

சேர்ந்தனர். 'ஏ! கங்காதேவி! உன்னிடத்தில் ஸ்நானஞ் செய்கிறவர்களுடைய சகல பாவங்களையும் போக்கி, எண்ணங்களை நிறைவேற்றுவது சத்தியமாக விருந்தால், இந்த திவ்விய க்ஷேத்திரத்தில் என் குமாரனை யான்காணும் படி செய்வாயாக!' வென்று பிரார்த்தனைசெய்துக்கொண்டு பலதடவை முழுகினர். 64 கட்டடங்களிலுமுள்ள பல ஆலயங்களிலும், சத்திரங்களிலும் மடங்களிலும் தேடினர். யாதொரு குறிப்புங்கூடகிடைக்கவில்லை. இப்படி இரவு பகலென்பதின்றி நான்கு வருஷகாலம் சுற்றி யலைந்தபடியால் மெய்தளர்ந்து முகம் வாடி எப்பொழுது ஓரிடத்தில் சற்று படுத்திருப்போமென்று எண்ண முள்ளவராய் கேதார கட்டத்திலுள்ள கேதாரேஸ்வரர் ஆலயத்தில் ஒருநாள் இரவு தங்கினர்.

" கங்காதேவியோ நமது பிராத்தனைக்கு பலன் கொடுக்கவில்லை. இனி நம்மால் நடந்து அலையவும் சக்தியில்லை, தேகத்தில் உயிரானது தாமரையிலையில் தண்ணீர்போல்தவிக்கின்றது. சிவசாம்பா! உன்னை நான் இனி காண்பது சமீபத்திலிருக்கவேண்டும். இல்லையாயின் இந்த ஜன்மத்திலில்லை" என்று சொல்லிக்கொண்டு ஓர் மூலையில் உட்கார்ந்தார்.

சந்தியா காலமாயிருந்தபடியால் ஆலயத்தில் வாத்திய கோஷத்தோடு வெகு விமரிசையாய் பூஜை நடந்துக்கொண்டிருந்தது. நூற்றுக்கணக்கான ஜனங்கள் ஸ்வாமிதரிசனத்திற்கு வந்து போய்க்கொண்டிருந்தார்கள். சுமார் ஒன்பது மணிக்கு பூஜைமுடிந்து ஜனக்கூட்டமும் குறைந்தது.

சந்நியாசி வேடம்பூண்ட லோகநாதய்யரிருந்த மேடையில் சில சந்நியாசிகள்வந்து தங்கள் காஷாயங்களை விரித்துப் படுத்துக் கொண்டார்கள். இவருக்கு சமீபத்தில் இருவர் படுத்துக்கொண்டிருக்க, அவர்களை யடுத்து ஒருவர் உட்கார்ந்துக்கொண்டே யிருந்தார்.

சமீபத்தில் படுத்துக்கொண்டிருக்கிறவர்களைப்பார்த்துலோகநாதய்யர் சுவாமிகளே! நீங்கள் எந்த வூரென்று இரண்டு மூன்று தடவை கேட்டனர். படுத்துக்கொண் டிருக்கிறவர்கள் பாஷை தெரியாததாலோ, உர்க்கத்தினாலோ, அலக்ஷியத்தினாலோ, வேறுயாதுகாரணத்தினாலோ பதில் கூறவில்லை. உட்கார்ந்திருந்தவர்:—

"உம்மையும் என்னையும் போன்ற சந்நியாசிகளுக்கு சொந்த ஊருமுண்டோ? நீர் ஊர், பெயர் விசாரிப்பதைப் பார்த்தால் சந்நியாசம், மேல்வேஷமேயன்றி யாதொன்றையும் விட்டவால்ல வென்று தோற்றுகின்றதே. உம்மோடு வார்த்தையாடுவதும் துன்பத்தை யுண்டாக்குமென்று பயப்பட வேண்டியன்றோ இருக்கின்றது."

லோகநாதய்யர் உடனே எழுந்து அவர் சமீபத்திற்குச்சென்று உட்கார்ந்தனர். தமிழ் பேசும் சந்நியாசி:—"ஏதைய்யா! தமிழ் பேசியவுடனேயே உமது ஆசை எம்மிடத்திற்கு வரும்படிசெய்தது. இன்னும் ஏதாவது என்னிடம் விசேஷமிருந்தால் என்ன செய்வீரோ அறியேன்."

"ஸ்வாமிகளே! தாங்கள் ஞானிகள். என் குமாரன் ஒருவனைத் தேடிக்கொண்டு எட்டு வருஷமாய் அலைகிறேன். ஆள் மாநிறமாயிருப்பான். இடதுகையில் ஆறுவிரலிருக்கும்"

தமிழ் பேசும் சந்நியாசி உடனே தனது இடதுகையை மறைத்துக்கொண்டனர். லோகநாதய்யர் உடனே அவரை யாவலுடன் ஆலிங்கனஞ் செய்துக்கொண்டு சிவசாம்பா! சிவசாம்பா! என்று இருமுறைகூறி பிடித்த பிடிவிடாமல் அவர்மேல் சாய்ந்துவிட்டனர்.

* * *

தமிழ்தெரிந்த சந்நியாசி:—இது என்ன தர்மசங்கடம்! சுவாமிகளே! என்னை விடுங்கள், உங்களுக்கு சுகிர்தமுண்டு, விடுங்கள்! என்று

பலதடவை உபயோகமின்றிக் கூறியதன்றி கைப்பிடியை நீக்கிக்கொள்ளவும் பிரயத்தனப் பட்டார்.

பிறகு இதுவும் தெய்வ சங்கல்பமென்று பிர்ம்ம தியானத்திலிருந்து விட்டார். காலையில் நிஷ்டையிலிருந்து எழுந்து, தன்னை இரவில் கட்டிக்கொண்டு அழைத்தபிடியா யிருப்பவர் முகத்தை உற்றுப்பார்த்தார். "நீரே மகாபுண்ணிய சீலர். இந்த ஸ்தலமே உமக்கு மோக்ஷம் கொடுப்பதாயிருக்க, புத்திர ஸந்தானத்தையும் விரும்பினீரோ" என்று சொல்லிக் கொண்டு, அவர் இடையில் கட்டிக்கொண்டிருந்த பையை சோதித்தார். அதில் முப்பது பவுன்களிருந்தன. அவைகளை அவ்விடத்திலிருந்தவர்களுக்குக் கொடுத்துவிட்டு, அவர் தேகத்தை எடுத்துக்கொண்டுபோய் கங்காநதியோரத்தில் வைத்து கங்கை நீரால் அபிஷேகஞ்செய்து, தலையில தேங்காயுமுடைத்து, தோணியின் மூலமாய் நடுகங்கைக்கு எடுத்துச் சென்று கங்கை நீரில் போட்டுவிட்டனர்.

மறுநாள், ஒருவர் கேதாரீஸ்வரர் ஆலயத்தில் இறந்து போனதாகவும அவரிடம 300-பவுன்களிருந்ததை ஒரு சந்நியாசி எடுத்துக்கொண்டு அவர் தேகத்தை கங்கையில் போட்டு விட்டதாகவும போலீசாருக்குத் தெரிந்து இவரைப் பிடித்துக் கொண்டுபோய சோதிக்க, ஒன்றும் அகப்படாத படியால் சப் ஜெயிலில் அடைத்து வைத்தனர். ஜெயில் அறை பூட்டப்பட்டிருந்ததன்றி போலீஸ்க்காரர்களும பாராக்கொடுத்துக் கொண்டு விழித்திருந்தனர். மறுநாள் போலீஸார் ஜெயில் அறையைத்திறந்து பார்க்க நமது ஸ்வாமிகளைக்காணவில்லை. தேடுகிறார்கள், இன்னும் தேடுகிறார்கள்.

ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடலில்
நாழி முகவாது நானாழி—தோழி
நிதியுங் கணவனு நேர்படினுந்தந்தம்
விதியின் பயனே பயன்.

## சிறுவர்க்கான பக்கம்.

[விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

## அப்பய்யன் கதை.

வேளை கூடும்பொழுது எல்லாம் கூடிவிடும்.

(முதல்பாகம்.)

ஒரு ஊரில் ஒரு பிராமணனிருந்தான். அவன சாதாரணமான குடித்தனக்காரன். அதிக புத்திமானுமல்ல. சக்திமானுமல்ல. கேவலம் முட்டாளுமல்ல. மத்திய ஸ்திதியிலிருந்தான். அவனுக்கு இகலோக சௌக்கியத்துக்காக ஒரு மனையாளுண்டு. அவளுடன் கூடி மனதொத்து வாழ்ந்து வந்தபோதிலும் இந்த வாழ்வை சிறப்பிக்கிற புத்திர பாக்கியம் மட்டிலில்லாத பெரும் பாவியானான். பிறகு இந்த சம்பத்துமட்டில் நமக்கு இல்லாத பக்ஷத்தில் இகத்தில் சௌக்கியம் போய்விடுவதுடன் பரத்திலும் கதியில்லை என்பதை நன்றாய் ஆலோசித்து இரண்டாம் விவாகம் செய்துகொள்ள யோசித்தான். இந்த எண்ணத்துக்கு மூத்தாள் கொஞ்சமேனும் சம்மதிக்கவில்லை. "அடிமேலடி யடித்தால் அம்மியும் நகரும்" என்பதுபோல் தினம் இரண்டு தடவை அவளை இந்த விஷயமாய் பீடித்து வர அவளும் புருஷன் உபத்திரவம் பொறுக்க மாட்டாமல் "அப்படியே செய்யுங்கள்" என்று உத்தரவு கொடுத்தாள் என்றாலும் நல்ல எண்ணத்துடன் கொடுத்த உத்திரவல்ல. "இந்தப் பிராமணன் இப்போது செய்து கொள்ளட்டும. நம்மால் அந்த இளையாளை ஒழித்துவிடத் தெரியாதா" என்று நினைத்து கொடுத்த உத்தரவாம். அந்தப்படியே பிராமணன் மற்றொரு அயல் கிராமஞ்சென்று ஒரு கன்னியை மணந்து அந்த இளையாளோடு வீடு வந்துசேர்ந்தான். மூத்தாளும் இளையாளும் அக்காள் தங்கைபோல் மனதொத்து வாழ்ந்துவந்தார்கள். மூத்தாள்மட்டும இளையாளை எப்பொழுதாவது கொன்றுவிடவேண்டுமென்று எண்ணியிருந்த போதிலும் உடனே செய்தால் ஜனங்கள் சங்கிப்பார்களாகையால் அதற்கு ஒத்த காலத்தை எதிர் பார்த்திருந்தவளாய் இருந்தாள்.

இப்படி யிருக்கையில் இளையாள் கர்ப்பம் தரித்தாள். பிராமணனுக்கு உண்டான ஆனந்

தத்திற்கு அளவுமுண்டோ. மேலும் அவனுக்கு முதிர்ந்த வயதிலுண்டான பாக்கியமாதலால் வெகுவாய் அதைக்கொண்டாடி கிரமமாயவளுக்கு காப்பு சீமந்தம் முதலிய வைகளைச் சிறப்பித்தான். மாதம் அதிகமாக ஆகவே இளையாளின் தாய்தகப்பன்மார்கள் தங்களூரில் பிரசவிக்கப் பெண்ணை அழைத்துப் போனார்கள். அங்கு அவள் யாதொரு குறைவின்றி வாழ்ந்துகொண்டிருந்தாள்.

இவ்விடம் மூத்தாள் வெகு நாளாய் இளையாளின் பேரில் இலக்குவைத்திருந்ததாகச் சொல்லியிருக்கிறோமே. அவளுடைய அசூயை இவள் கர்ப்பமாகவே ஜாஸ்தியாய்ப் பொங்கிற்று. பிராமணனுக்கோ தேகம் மூத்தாளிடமும், உயிர் இளையாளிடமுமாக இருந்தனர். தினம் தன் மூத்த பெண்சாதியினிடம் வருவான். "அடியே சாதம் கொஞ்சம் பிசைந்து கொடடி அவளைப் போய் பார்த்து வருவோம்" என்பான். மூத்தாள் இதுதான் சமயம், இனமாய் இளையாளை நாம் கொன்று விடுவோம் என்று யோசித்து "ஆம், அவளுக்கும் உங்களுக்கு இருப்பதுபோ லிருக்குமல்லவா. நாளை நான நெய்யில் ஊத்தப்பம் சுட்டுத்தருகிறேன். அவளோ வயிறும் பிள்ளையு மாயிருக்கிறாள். அவளிடம் நூறு அப்பம் கையில்கொண்டுபோய்க் கொடுத்து திருப்தியாய்த் தின்னச்சொல்லிப் பார்த்து வாருங்கள். உங்களுக்கு வழிப்பயணத்திற்கு அலாதியாய்க் கட்டிக்கொடுக்கிறேன். இல்லாவிட்டால் அவளுக்குக்கட்டிக் கொடுக்கும் மசக்கை பக்ஷணத்தை நீங்கள் பாதி வழியிலேயே ஒழித்துவிடுவீர்களே" என்றாள். அதற்குப் பிராமணன் "இல்லேயடி இல்லே. அவளுக்கு ஒரு வெங்கலப்பானையில் நூறு அப்பம் தனியாய்க் கொஞ்சம் வேப்பிலைக் கொத்தும் போட்டுவைத்துக்கொடு. எனக்கு அந்த சின்ன சவுக்கத்தில் கொஞ்சம் முடிந்து கொடு" என்றான். அந்தப்படியே மறுநாள் மூத்தாள் தன்புருஷன் போனால் மாங்கலயம் போய்விடுமாகையால் அவனுக்குமட்டில் பத்து பதினைத்து அதிரசம் நெய்யில் சுட்டுக்கொடுத்து தன் சக்களத்தியாகிய இளையாளுக்கு மாவில் கொஞ்சம் விஷத்தைக் கலந்து நூறு கொதியப்பம் வார்த்து வெங்கலப் பானையில் வைத்துக்கொடுத்தாள். புருஷனும் எப்போ எப்போ என்று காத்திருந்த வனுகையால் வெங்கலப்பானையைத் தூக்கித் தலையில் வைத்துத் தன் சவுக்க மூட்டையைத் தோளில் மாட்டி வெயிலைப் பாராமல் வழி நடந்தான்.

வேகமாய் நடந்து அஸ்தமிக்கும்பொழுதில் மூன்றுகாததூரம் போய்விட்டான். பிராமணனுக்கு தேகத்தில் வந்த அலுப்புக்கு அளவில்லை. அங்கு ஒரு குளமும் சாவடியும தோன்றின. குளத்திலிறங்கி கைகால்களைக் கழுவி சந்தியாவந்தனம் செய்து துணியில் தன் பெண்சாதி முடிந்து கொடுத்த அதிரசத்தை அவிழ்த்து சாப்பிட்டு, நடந்த சிரமம் மேலிட்டதனால் தன்னையறியாமல் நித்திரைவந்து விடவே சாவடியிற்சென்று தலைமாட்டில் பானையை வைத்துப் படுத்துக்கொண்டான். அவ்வளவுதான் தெரியும் அவனுக்குத் தன்னையறியாமல் நித்திரை வந்து விட்டது. கும்பகர்ணனுக்கு இரண்டாவன் போல் நித்திரை செய்தான்.

அந்த சாவடிக்கு ஐந்து நாழிவழி தூரத்தில் சோதிநகரம் என்றொரு தேசமுண்டு. அந்த நகரத்தரசன் வெகுநாள் புத்திரனில்லாமல் பராசக்தியை உத்தேசித்துத் தபம்செய்து அந்தத் தெய்வத்தின் பிரீதியால் ஒரு பெண்ணைப்பெற்றான். உலகத்திலுள்ள அழகையெல்லாம உருட்டித்திரட்டி வைத்தாற்போலந்தப்பெண்ணின் அழகு காணப்பட்டது. அவளை அரசன் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்த்துவந்தான். அவள் பாலியப்பருவமடைந்தும் தகுந்த புருஷன் ஒருவன் கிடைக்காததால் அவள் கலியாண உத்ஸவத்தை நடத்தாமலிருந்தான். அரசனுடைய அருமை மகளாதலால் அவளுடைய செல்வததிற்குச் சொல்லவேண்டுமா. அவள் உட்காரும பலகைகளெல்லாம் தங்கப் பலகைகள், கட்டில்கள் கனகக் கட்டில்கள்; கற்களிழைக்கப்பட்டு கோடி சூரியப் பிரகாசமாய் விளக்கின.

இந்தச் சோதிநகரத்து அரசனுக்கும் அப்புக்காத்தான என்றொரு கள்ளத்தலைவனுக்கும் ஒரு பெரும் மனஸ்தாபம் நேரிட்டிருந்தது. ஏனெனில் அப்புக்காத்தானுக்கு ஒரு அருமை மகனுண்டு. அவன் ஜாதியில் திருடனு யிருந்தபோதிலும் அழகிலும் நற்குண நற்செய்கைகளிலும் சிறந்தவனுயிருந்தான். இந்த மகனுக்கு சோதிநகரத்து ராஜகுமாரத்

தியை அப்புக்காத்தான் கேட்டிருந்ததுண்டு. மாப்பிள்ளை என்ன அழகாயிருந்தபோதிலும் ஜாதி கள்ளசாதியானபடியால் சோதிநாட்டரசன் அவனுக்குப் பெண்ணைக்கொடுக்க இசையவில்லை. இப்படியாயிருந்தது.

ஒருநாள் அப்புக்காத்தான் என்னும் கள்ளத் தலைவன் தன் ஆட்களில் சரியாய் நூறு பெயர்களைக் கூப்பிட்டு அவர்களிடம் சோதிநகரம் சென்று அஞ்சன வித்தைகளால் இராஜகுமாரத்தி தூங்கும் அறைக்குப்போய் அவளை தூக்கம் கலையாமல் கட்டிலுடன் தூக்கி காட்டிற்குக் கொண்டுவந்துவிடும்படி கட்டளையிட்டான். அவர்கள் எல்லோரும் அப்படியே புறப்பட்டுச் சென்றார்கள். அஞ்சனபலத்தால் இராஜகுமாரத்தி தூங்கும் அறை சேர்ந்து கட்டில் கொஞ்சமேனு மசையாதபடி அவளைத் தூக்கிக்கொண்டு ஐந்து நாழிகைவழி தூரத்திலிருக்கும் சாவடி வந்து சேர்ந்தார்கள். அன்றிரவு தான் பிராமணன் பக்ஷணத்தோடு அங்குவந்து தூங்கினன். திருடர்கள் கட்டிலைச் சாவடியிலிறக்கி குளத்திற்சென்று நீருந்தி வருவோமென்று யோசிக்கையில் அதிரசவாசனையை மணந்து இந்த இடத்தில் இப்பேர்ப்பட்ட மணம் வரக்காரணம் என்னவென்று பார்க்கையில் பிராமணன் தூங்குவதையும் தலைமாட்டில் மூட்டையையும் கண்டார்கள். உடனே வெங்கலப்பானையை யெடுத்துப் பார்க்கவே நூறு அதிரசங்களதிலிருந்தன. இது நம்முடைய பாக்கியமென்றெண்ணி வந்தபெயர்களும் நூறு ஆகையால் ஆளுக்கொரு அதிரசமாய் புசிக்கத் தலைப்பட்டார்கள். இந்தப் பணியாரங்கள் மூத்தாள் விஷங்கலந்து கட்டி பிராமணன் கையில் இளையாளுக்குக் கொடுத்ததாக நாம் முன்னமே சொல்லியிருக்கிறோமே. இவைகளைத் தின்றபிறகு திருடர்கள் எப்படி பிழைக்கக் கூடும். எல்லோரும் மாண்டார்கள். அவர்களில் ஒருவனவது மீறவில்லை. கொஞ்ச சிரமம் தீரவே பிராமணனும் கண்விழித்துப் பார்த்தான். தலைமாட்டிலிருந்த வெங்கலப் பானையைக் காணோம். தனக்கு எதிரில் நூறு பெயர்கள் கத்தியும் கையுமாய் படுத்திருப்பதைக் கண்டு இவர்கள் தான் நம்முடைய பக்ஷணத்தை தின்றிருக்கவேண்டுமென்று நினைத்து அவர்களுள் ஒருவன் கைக்கத்தியைப் பிடுங்கிக்கொண்டு நல்லது என்னதான் ஆகிறது பார்ப்போம் என்று ஒவ்வொருவனைப் வெட்டிக்கொண்டேபோய் கடைசியவனையும் வெட்டிவிட்டான், இவர்கள் எல்லாம் பிரேதங்கள் என்றாவது அல்லது இவர்கள் தன்னுடைய விஷங்கலந்திருந்த அதிரசத்தைத் தின்று மாண்டார்கள் என்றாவது அல்லது மூத்தாள் இளையாளைக் கொல்ல விஷம் கலந்து பணியாரஞ் சுட்டுக் கொடுத்தாள் என்றாவது இந்த பிராமணனுக்குத் தெரியவே தெரியாது. அவர்களைக் கொன்றுவிட்டு குளத்திற்சென்று கைகால்களை கழுவிக்கொண்டு சாவடியில் வரவே அங்கு ஒரு மூலையில் ஜகஜோதியாக வைக்கப்பட்டிருந்த ரத்தினமிழைத்திருந்த கட்டிலைக்கண்டு அதனிடம் போய்ப் பார்க்கவே கேவலம் அழகே அவதாரம் செய்து பெண்ணுருக்கொண்டு வந்தாற்போல் தூங்கும் இராஜகுமாரத்தியைக் கண்டான். கொஞ்சம் புத்திமானாகையால் கட்டிலில் தூங்கும் பெண்ணையும் எதிரில் தான் கொன்ற பெயர்களையும் பார்த்து "ஓஹோ இவர்கள் திருடர்களாகவேண்டும். இந்தப் பெண்ணை எங்கிருந்தோ கொண்டு வந்திருக்கிறார்கள். எல்லாம் இவளைக் கேட்டால் தெரியும்" என்றெண்ணி அவளை எழுப்பினன். அவள் எழுந்திருந்து தான் வழக்கமாய்த் தூங்கும் அறையிலில்லாமல் காட்டிலிருப்பதையும் தன் முன் ஒரு ஆள் நிற்பதையும் பார்த்துப் பயந்தாள். பிராமணன் பயப்படாமலிருக்கச் சொல்லி தான் அவளைக் கொண்டுவந்த நூறு திருடர்களையும் கொன்று

விட்டதாகச் சொன்னான். அவள் கண்டு ஆச்சரியப்பட்டு இவனல்லவோ சூரன், நூறு பெயர்களையும் கொன்றானல்லவா என்று சந்தோஷப்பட்டு திருடர்கள் அப்புக்காத்தான் மனிதர்களாகத் தானிருக்கவேண்டுமென்று மனதில் நிச்சயம் பண்ணிக்கொண்டு பிராமணனைப் பார்த்து இந்த உலகத்திற்குள் தங்களைப்போலொத்த தீரர்களைப் பார்த்ததில்லை. எனக்கு நாதன் நீங்களே. இந்த நூறு கிரதகர்கையினின்றும் என்னை விடுவித்தீர்கள்; இன்னும் காலைவரையில் என்னை விடாமற் காத்து என் தகப்பனாரிடம் ஒப்புவித்து என்னை மணம்புரியவேண்டும் எனவே வலுவிற் றனக்கு வந்த பாக்கியத்தைக்கண்டு பிராமணன் சந்தோஷப்பட்டு அப்படியே ஒப்புக்கொண்டான்.

இங்கு இப்படியிருக்கையில் அரசன் மனையிலோ இராஜ குமாரத்தியைக் காத்திருந்த வேலைக்காரிகள் எழுந்திருந்து பார்த்து ராஜ குமாரத்தியைக் காணாமற திடுக்கிட்டு உடனே அரசனிடம் தெரிவித்தார்கள். அரசனுக்குச் சந்தேகம் அப்புக்காத்தானிடமாதலால் கட்டிலுடன் பெண் காணாமற்போயிருக்கவே அவன்தான் கொண்டுபோயிருக்கவேண்டுமென்று நினைத்து அவன் காட்டுவழியாய்ச் சைனியத்தைத் திரட்டிக்கொண்டு புறப்பட்டான. ஐந்துநாழிகைவழி வந்ததும் சாவடியில் தன் பெண்ணும் பிராமணனுமிருப்பதையும் நூறு கள்ளர்கள் வெட்டுண்டிருப்பதையும் கண்டு ஓடோடியும்வந்து தன் பெண்ணை வாரி எடுத்து "நீ ஆபத்தில்லாமல் பிழைத்திருக்கிறாயா" என்று வினவ, அவள் "இந்த வீர பிராமணனால் எனக்கு யாதொரு குறைவுமில்லை. இவர்தான் என்னைக் காபபாற்றினவர். இவர்தான் உங்கள் மாப்பிள்ளையாக வேண்டும்" என்றாள். அரசனும் நடந்த சங்கதியை பிராமணனிடம் நன்றாய் விசாரிக்க பிராமணன் சமாசாரங்களின் போக்கை நன்றாய் அறிந்துகொண்டுவிட்டபடியால் தான் நூறு பெயர்களை எதிர்த்து யுத்தம்பண்ணினதைப் பிரமாதமாய் வர்ணித்து அரசன் மனத்தைக் களிப்பித்தான். அரசன் பார்த்து "இவன் நூறு திருடர்களைக் கொன்றவன்" என்ற பட்டம் அங்கேயே கொடுத்து "நூறு பெயர்களுக்கு நமன்" என்று நாமம் வைத்தழைத்து ஊருக்கு இட்டுக்கொண்டுபோய் தன் பெண்ணையும் கட்டிக்கொடுத்தான். அன்றியும் அரசனுக்கு புத்திரபாக்கியமில்லையாதலால் நமக்குப் பிற்காலத்தில் நம்முடைய தேசத்தையாள ஈசுவரனிவரைத் தானனுப்பினாரோ என்னமோவென்று நினைத்து நினைத்து மனமகிழ்ந்தான். அப்புக்காத்தானும் நூறு பெயர்களைக் கொன்ற நமன் அங்கிருக்கிறான் என்று அன்றுமுதல் சோதி நகரத்தரசன் எண்ணத்தையே விட்டுவிட்டான். பெண்ணும் மாப்பிள்ளையும் அந்த நகரத்தில் மன்மதனும் ரதியும்போல் வாழ்ந்து வந்தார்கள்.

---

## REFORM OF RURAL EDUCATION.

(*From the Hindu of 10th October* 1916.)

MR. C. V. SWAMINATHAIYAR writes :—

With reference to the editorial note in the "Hindu" on Rural Education in America, will you permit me to draw your attention to a Memorandum on the Reform of Rural Education which I have prepared after consultation with all those whom I know to be interested in the improvement of children's education. I have myself given some 30 years of my life for studying the question in the light of personal experiences gained in the course of my work in connection with the Diffusion of Knowledge Agency which was founded by the active support and encouragement of such men as the late Sir T. Muthuswamy Iyer, Dewan Bahadur R. Raghunatha Rao, Dewan Bahadur S. Srinivasaraghava Iyengar and my own Guru. It is based on a constructive plan and deals with (i) First Principles, (ii) Organization and (iii) Means and Methods. I send you a copy of Memorandum itself which embodies in its appendix the suggestions and hints I have received from those whom I consulted, in a highly digested form.

"I am desired to acknowledge, with thanks, the receipt of an advance copy of your memorandum on the 'Reform of Rural Education,' forwarded to the Hon'ble Sir Sankaran Nair, with your letter No. 5224, D. O., dated the 7th October 1916."

Yours truly,

G. HENDERSON,

*Asst. Secy. to the Govnt. of India,*

*Dept. of Education, Simla.*

## DEEPAVALI FESTIVAL.

## தீபாவலிப் பண்டிகை.

"கங்கா ஸ்நாநம் ஆயிற்று?"

(அக்டோபர்மீ 25உ புதன்கிழமை.)

தீபாவலிப்பண்டிகை யென்பது பஞ்சாங்கத்தில் நரகசதுர்த்தசி யென்று குறிக்கப்பட்டிருக்கிறது. இது நவராத்திரிக்குப்பின் அதையடுத்துவரும் கிருஷ்ணசதுர்த்தசி யன்று கொண்டாடப்படும் ஒரு தேசப்பொதுப்பண்டிகை. ஹிமாலயம் முதல் கன்னியாகுமரி வரையில் இப்பண்டிகை ஹிந்துக்கள் எல்லாராலும் கொண்டாடப்படுகிறது. ஆதலால், இது நவராத்திரி, தசராவைப்போல் இப்பரதக் கண்டம் முழுவதுக்கும் பொதுவானதோர் பண்டிகை. அன்று விடியற்காலம் எல்லோரும் எண்ணெய் தேய்த்துக்கொண்டு மங்களஸ்நாநம் செய்து கோடியுடுத்தி தீபவரிசைகளால் வீட்டையலங்கரித்து பண்டு பலகாராதிகள் புசித்துப் பண்டிகை கொண்டாடுவார்கள். பொழுது விடிந்ததும் அவரவர் தம் சிநேகிதர்களையும் நல்லோர் பெரியோர்களையும் கண்டு தரிசித்து "கங்காஸ்நாநம் ஆயிற்று" என்று பண்டிகை விசாரித்து மனங்கலந்து அளவளாவியிருந்து வருவார்கள். குழந்தைகள் பாணவேடிக்கைகள் வெடிபட்டாசுகள் கொளுத்திச் சந்தோஷிப்பார்கள்.

இது பண்டிகைச் சுருக்கம். இப்பண்டிகையின் பூர்வோத்தரமும் வரலாறும் என்னவென்று சற்று விசாரிப்போம். ஏனெனில் நவநாகரிகமிகுந்த இக்காலத்தில் பூர்வ சம்பிரதாயமாயுள்ள பண்டிகைகளைக்கொண்டாடியும் அதன் கருத்தையும் அர்த்தத்தையும் அனேகர் விசாரித்தறிகிறதில்லை. பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்கு இப்படிப்பட்ட தேசப்பொது பண்டிகைகளின் அர்த்தம் இன்னதென்று தெரியவில்லை யென்று வடமேற்கு மாகாணத்தில் வித்யா இலாகா பரீக்ஷகர்கள் அவர்கள் ரிபோர்ட்டில் முறையிட்டிருக்கிறார்கள்.

இந்த உலகத்திலுள்ள சக்திகளையெல்லாம் துவந்துவம் (தொந்தம்), மிதுனம் என இருவகைத்தாகப் பிரிக்கலாம். துவந்துவசக்திகள் ஒன்றுக்கொன்று எதிரிடையாகவிருந்து கொண்டு எப்பொழுதும் ஏற்றத்தாழ்ச்சிக்குக் காரணமாய் ஜயாபஜயங்களை யுண்டுபண்ணிக் கொண்டேயிருக்கும். மிதுனசக்தியோ ஒன்றுக்கொன்று ஐக்கிய பத்தியம் கொண்டனவாய் ஒன்றையொன்றிழுத்துக்கொண்டு எல்லாம் ஒன்றாய் ஏகரஸமாயிருந்து அறிவை விர்த்திசெய்துகொண்டு அகண்டானந்த ஐசுவரியத்திற்குக் காரணமாயிருக்கும். இவையிரண்டுக்கும் சாஸ்திரக்ஞர் "Polar activity" "துருவசக்தி" யென்றும், "Magnetic force" காந்தசக்தி அல்லது மிதுன சக்தி யென்றும் சொல்லுவார்கள்.

தேவாசுரர்கள் எப்போதும் எதிரிடை முயற்சியுள்ளவர்கள். தேவரிஷிகள் மிதுன சக்திக்குள்பட்டவர்கள். தேவர் ஸ்வயம்பிரகாச அறிவுடையவர்கள். அசுரர் இருள் (அறியாமை) கவிக்க புத்தி யுடையவர்கள். முன்னவர் "ஆத்மா நான்" என்று பிரவிர்த்திப்பவர்கள். பின்னவர்கள் "தேஹம்நான்" என்று பிரவிர்த்திப்பவர்கள். தேவர்கள் கர்மதர்மத்தையனுசரிப்பவர்கள்; அசுரர்கள் "வல்லான் வகுத்ததே வாய்க்கால்" என்று தங்கள் கைபலத்தைக்கொண்டு எல்லாரையும் தங்களுக்கு அடிமையாக்கி அஹம்விருத்தியையே நாட்டமாயுடையவர்கள்.

நவராத்திரியில் சித் - தேவி பண்டாசுரன், மஹிஷாசுரன் முதலிய அசுரக்கூட்டங்களை ஜயித்துத் துரத்தியபின் விஜயதசமியில் வித்யாலக்ஷமியை ஸ்தாபித்து வில்லம்புதொடுத்து விவேகஞானம் உதயமாகச் செய்கிறார். விவேகசைதன்னியர்களான மானுடர்களில் மஹாவலி யென்னும் சக்ரவர்த்தி தன்புஜ பலத்தால் திரிலோகாதிபதியாக ஆண்டுவருகையில் தன்வலி விசேஷத்தால் செருக்குற்று

தர்மளிக்கம் செய்துவந்தான். ஆதலால் அவன் செருக்கையடக்கும்பொருட்டு, காப்புத்தொழில் கர்த்தாவாகிய மஹாவிஷ்ணு சிஷ்டபரிபாலனர்த்தம் துஷ்டநிக்ரஹம் செய்யக்கருதி ஒரு குள்ளப்பிராமணனாய் "வாமனரூபம்" எடுத்துக்கொண்டு யஜ்ஞம் செய்யவேண்டி மூன்றடி இடம் வேண்டுமென்று இரந்துநின்றார். மஹாவலி சக்ரவர்த்தியும் கொடைவள்ளல் ஆகையால் "அப்படியே கொடுத்தேன்" என்று சொல்லி அர்க்கியம்விட்டு தத்தம் செய்து கொடுத்துவிட்டார்.

பகவான் சக்ரவர்த்தியின் உண்மைக் குணத்தை உணர்ந்தவர். அசுரகுருவாகிய சுக்கிராசாரி குள்ளனை நம்பாதே யென்று எச்சரித்தும் அவர் கேட்கவில்லை. ஆகவே "மூன்றடி இடம் தந்தேன்" என்று தத்தம் வாங்கிக்கொண்ட பின் குள்ளப்பிராமணன் தனது வாமன வடிவத்தை விரித்து விசுவரூபங் கொண்டு, பூமியையெல்லாம் ஒரு அடியால் அளந்து, ஆகாசத்தையெல்லாம் மற்றொரு அடியால் அளந்துவிட்டு, மூன்றாவது அடி வைக்க இடம் எங்கே யென்று கேட்டார். சக்ரவர்த்தி புஜபலத்தையே நம்பினவரானலும் விவேகசம்பந்நராதலால், இப்படிப்பட்ட வித்தைசெய்ய வல்லவர் மஹாவிஷ்ணுவாகவேயிருக்கவேண்டுமென்றெண்ணி, ஸத்தியம் தவறக்கூடாதென்கிற கட்டுக்குட்பட்டு, மூன்றாவது அடியை அவர் தலையில் வைக்கச்சொல்லிக்காட்டினார். அப்படியே பகவான் அவர் தலையில் திருப்பாதம் வைத்து அழுத்த அவர் பாதாளலோகம் சென்று அடைந்தார். அங்கே நரகமிருக்குமிடமானாலும், பகவான் உண்மைக்குக் கட்டுப்பட்டு நடந்தவரைக் கைவிடக்கூடாதென்று தானும் நரகத்திற்குச் சென்று நகாசுரனை வதைசெய்து மஹாவலிக்கு தரிசனமளித்து அவர் அஹங்காரமிகுதியால் செய்த அக்கிரமங்களின் கர்ம பலனை அனுபவித்தபின் இந்திரப்பட்டம் பெறுவாய் என்று அனுக்கிரகித்தார்.

எப்பொழுதும் பூதவுடலிலும் புகழுடம்பே பெரிதென்றுன்னிய மஹாவலி சக்ரவர்த்தி தன் ஞாபகம் பூலோகத்தில் நிலைத்திருக்கவேண்டுமென்று தனக்கு நரகத்தில் தரிசனம் தந்த அத்தருணத்தை பூலோகத்தில் எல்லாரும் புண்யகாலமாகக் கொண்டாடவேண்டுமென்றும் அக்காலத்தில் மங்களஸ்நாநம் செய்து அந்த நரகசதுர்த்தசியைக் கொண்டாடுகிறவர்களுக்கு நதிகளிலெல்லாம் புண்யநதியாகிய கங்கையில் ஸ்நாநம்செய்த பலன் தந்தருளவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார். "அப்படியே" யென்று மஹாவிஷ்ணுவும் அவருக்கு வரந்தந்தருளினர். ஆதலால் இந்த நரகசதுர்த்தசியாகிய தீபாவலிப் பண்டிகையின் உட்கருத்து என்னவென்றால் ஜடசக்தியிலும் ஆத்மசக்தியே மேல் என்பதை ருசுப்படுத்துவதாம். இந்த நினைவுதானே எல்லா ஜனங்களாலும் ஒரே காலத்தில் தியானிக்கப்படும்பொழுது அது தியேயாகாரமாகி அமிர்த கலையை வர்ஷிக்கச்செய்கிறது. அமிர்தவர்ஷணமே "கங்காஸ்நாநம் ஆயிற்றா?" என்று பண்டிகை விசாரிப்பதின் உட்கருத்து. ஜடசக்தியிலும் ஆத்மசக்தியே பெரிதென்கிற உண்மையை கிரகித்தீர்களா? என்று விசாரித்து முகமன் கூறிக்கொண்டு அது திடபாவமாகவிருந்து தர்மக்ஷேமத்தை விர்த்திசெய்யவேண்டுமென்பதே. இப்படியாகவுள்ள பண்டிகைகளைக் கொண்டாடிவருவதால், தேசப்பொதுவின் யோகக்ஷேமவிர்த்தி யதிகரிக்கிறது ஆதலால் இதையெல்லாரும் நன்குணர்ந்து சிந்திக்கவேண்டுமென்று நல்லோர் பெரியோர் எல்லாரையும் நாடிப் பண்டிகை விசாரித்தபின் த்வேஷபாவமுடையவர்கள் கூட இப்பண்டிகை விசாரிக்குங்காலத்தில் அந்த த்வேஷபாவத்தை மறந்திருந்து இஷ்டானுகூல பாவர்களாயிருக்கவேண்டு மென்பதை வற்புறுத்துவான் இதை மேலோர் உபதேசித்தபடி இங்கே வெளியிடலானோம்.